# முன்னுரை

'சந்திரமதி' என்ற இந்தச் சிறு நாவல் மேவார் ராணா அமரசிம்மன் வாழ்வில் ஏற்பட்ட ஒரு சிறு சம்பவத்தைக் கொண்டு புனையப்பட்டிருக்கிறது. சுமார் இருபத்தி ஐந்து ஆண்டுகள் அக்பரிடம் போரிட்டு மேவார் சுதந்திரத்தைக் காப்பாற்றிய ராணா பிரதாப சிம்மன் தனக்குப் பின்னால் மேவாரின் சுதந்திரம் பறிபோய்விடும் என்று நம்பினான். சுகத்துக்காக சுதந்திரம் தியாகம் செய்யப்படும் என்று எண்ணினான். ஆகவேதான் இறக்கும் தருவாயில் தனது படைத் தலைவர்களிடம், "சுகத்தை நாடி சுதந்திரத்தை இழக்க மாட்டோம்" என்று சத்தியமும் வாங்கிக் கொண்டான்.

ஆனால் பிரதாப் எதிர்பார்த்ததுதான் நடந்தது. அவன் மகன் அமரசிம்மன் ராணாவானதும் உதயபூர் ஏரிக்கரையில் சலவைக்கல் அரண்மனை ஒன்றைக் கட்டினான். பிரிட்டிஷ் வியாபாரிகளிடம் இருந்து ஒரு பிரும்மாண்டமான கண்ணாடியை வாங்கித் தனது தர்பார் மண்டபத்தை அழகு செய்தான். நாட்டை மறந்து போக வாழ்க்கையில் மூழ்கினான். இந்த நிலையைத் திருத்த சலூம்ப்ரா வம்சத்தவனான சந்தசிம்மன் முயன்றான். ராணாவின் தர்பார் மஹால் கண்ணாடி மீது கல்லெறிந்து அதை உடைத்து, ராணாவையும் சிம்மாசனத்திலிருந்து கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய் புரவியில் ஏற்றி மற்ற

படைத் தலைவர்களை நோக்கி, "ராணா பிரதாப்பின் மகனை அவமானத்திலிருந்து காப்போம் வாருங்கள்" என்று கூவினான் உணர்ச்சிப் பெருக்கால்.

அன்று முதல் மீண்டும் சுதந்திரப் போர் துவங்கியது முதலில் ஒம்ஸ்தலா என்ற ஒண்டாலா கோட்டையைத் தாக்கி அப்துல்லாவைக் கொன்று விட்டான் அமரசிம்மன் இது சம்பந்தமான விபரங்கள், அமரசிம்மன் போர வாழ்க்கை முதலிய சகலமும் கர்னல் ஜேம்ஸ் டாட் எழுதிய ராஜபுதனச் சரித்திரக் குறிப்புகளில், ANNALS AND ANTIQUITIES OF RAJASTHAN என்ற நூலில், முதல் பாகமான மேவார் தொகுப்பில் பக்கம் 121 முதல் 123 வரை காணப் படுகின்றன. அந்த வரலாற்று ஆதாரங்களை வைத்து இந்நாவல் புனையப்பட்டிருக்கிறது.

இந்தச் சிறு நாவல் 'குங்குமம்' மலிவுப் பதிப்பாக வந்த போது மிகவிரைவில் செலவாகிவிட்டது. இப்பொழுது எனது நிரந்தர பப்ளிஷர் வானதி அதிபர் திரு. திருநாவுக்கரசு இதை வழக்கமான புத்தக வடிவில் கொண்டு வந்திருக் கிறார். அவருக்கும் இந்தப் புத்தகத்தை எழுதத் துரிதப் படுத்திய 'குங்குமம்' காரியாலயத்தாருக்கும், எப்பொழுதும் என்னை ஆதரித்து வரும் தமிழ்ப் பெருமக்களுக்கும் எனது நன்றி உரித்தாகும்.

– சாண்டில்யன்

# சந்திரமதி



## பெண் பிடி படலம்

சலூரம்ப்ரா வம்சத்தவனான சத்ருஞ்சயன் இப் பொழுது ராஜபுதனத்தில் ஒண்டாலா என்று வழங்கப் படும் ஓம்ஸ்தலா கோட்டையை மாலைக்கதிரவன் மலை வாயிலில் மறைவதற்கு முன்னரே அடைந்து விட வேண்டுமென்ற எண்ணத்துடன் மலை வழியில் வேகமாகவே நடந்தானென்றாலும், அது முடியாத தென்று முடிவுக்கு வந்ததால் சிறிது இளைப்பாறலாம் என்று எண்ணமிட்டவன் திடீரென தனது முடிவை மாற்றிக் கொண்டான். ஒரு வினாடி மலைவழி யிலிருந்த ஒரு பாறைமீது காலை வைத்து எண்ணத்தை ஓட விட்டவன் தனது தந்தை அந்தப் பயணத்தின் ஆரம்பத்தில் சொன்ன அறிவுரையை நினைத்துப் பார்த்தான்.

தந்தையும் தானும் உட்கார்ந்திருந்த இடத்தையும் நினைத்ததால் சிறிது கவலையும் துன்பமும் அவன்

இதயத்தே ஓடி முகத்திலும் அவற்றின் சாயை படரவே, "மொகலாய சாம்ராஜ்யத்தைக் கால் நூற்றாண்டு தன்னந் தனியாக ஆட்டி வைத்த ராணாபிரதாப் இறந்த இடம் அது. பெஷோலா ஏரியின் சிறு குடிசை தான். ஆனால் எத்தனை வீர நிகழ்ச்சிகளுக்குப் பிறகு ராணா படுத்த இடம் அது? எந்தவிதப் பிரமாணத்தை வாங்கிக் கொண்டு அவர் உயிர் நீத்த புனித நிலம் அது?" என்று நினைப்பை ஓட்டிய சத்ருஞ்சயன் தனது தந்தை அந்தக் குடிசையை எத்தனை புனிதமாக மதித்தார் என்று எண்ணமிட்டான்.

குடிசைத் தரையில் உட்கார்ந்த நாற்பது வயது சலூம்ப்ரா தனது மகனைப் பார்த்து, "உன்னை இங்கு ஏன் உட்கார வைத்திருக்கிறேன் தெரியுமா?" என்று வினவினார்.

"அரண்மனை இருந்தும் நீங்கள் இங்கு பிடிவாத மாக வசிப்பதுதான் காரணமாயிருக்க வேண்டும்" என்றான் சத்ருஞ்சயன்.

"அதல்ல காரணம்" என்ற பெரிய சலூம்ப்ரா, "மகனே, உனக்குச் சத்ருஞ்சயன் என்று பெயர் வைத் திருக்கிறேன். நீ சத்ருக்களை ஜெயிக்கவேண்டும். சத்ருக்களை ஜெயித்தவர் வாழ்ந்த குடிசை இது. உனக்கும் அந்தப் பலமும் நெஞ்சுறுதியும் வரட்டும் என்பதற்காகத்தான் இங்கு நான் உன்னுடன் ஜீவிக் கிறேன். ராணா பிரதாப் இறக்கும்போது எங்களிடம் ஒரு சத்தியம் வாங்கிக்கொண்டார். அரண்மனை சுகத்துக்கு ஆசைப்பட்டு மானத்தையும் சுதந்திரத்தை யும் மொகலாயரிடம் இழந்து விடாதீர்கள் என்று

சொன்னார். என் மகனை சுக வாழ்விலிருந்து காப் பாற்றுங்கள் என்றும் உறுதி வாங்கிக் கெண்டார். அந்த உறுதி என்ன ஆயிற்று பார்த்தாயா?" என்று வினவினார்.

சத்ருஞ்சயன் சிறிது சிந்தித்தான். பிறகு சொன் னான், "பார்த்தேன்" என்று.

"என்ன பார்த்தாய்?" தந்தை கேட்டார் உணர்ச்சி யுடன்.

சத்ருஞ்சயன் முகத்திலும் உணர்ச்சி பரவிற்று. "நமது புது ராணா அரண்மனை கட்டி விட்டார், நல்ல சலவைக்கல்," என்றான் சத்ருஞ்சயன்.

"சலவைக் கற்களை அவரே தொட்டுத் தடவித் தேர்ந்தெடுத்தார்," என்றார் பெரிய சலூம்ப்ரா.

"அப்படித்தான் கேள்வி" என்றான் சின்ன சலூம்ப்ரா.

"கேள்வியாவது — நானே நேரில் பார்த்தேன்," என்ற தந்தையின் குரலில் கடுமை ஒலித்தது.

சத்ருஞ்சயன் வேகமாக யோசித்தான் "அப்பா! நேற்று அந்தப் புது அரண்மனையைப் பார்வையிட ஒரு வெள்ளைக்காரர் வந்தாரே, அவர் யார்?" என்று வினவினார்.

தந்தையின் முகத்தில் சிந்தனைக்குப் பதில் சீற்றம் படர்ந்தது. "அவர் ஒரு கண்ணாடி வியாபாரி. நமது புது அரண்மனை தர்பார் மஹாலில் பெரிய கண்ணாடி

அமைக்க அளவெடுக்க வந்திருக்கிறார்," என்றா
பெரிய சலூம்ப்ரா.

"அப்புறம்?" என்று சத்ருஞ்சயன் வினவினான்.

"நல்ல கட்டில் மெத்தைகளுக்கு ஏற்கெனவே
ஏற்பாடு செய்தாகிவிட்டது. ராணா நன்றாகத் தூங்
கலாம். ராணா தூங்கினால் மேவாரும் தூங்கும்,
என்ற சலூம்ப்ரா, "சத்ருஞ்சயா! இங்குதான் நமது
கடமை வருகிறது," என்றார்.

"என்ன தந்தையே?" என்று வினவினான் சத்ருஞ்
சயன்.

"ராணாவை உறங்கவிடக் கூடாது, மேவாரை
அழியவிடக் கூடாது. நான் ராணா பிரதாப்புக்குக்
கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டும்,
என்றார் பெரிய சலூம்ப்ரா.

"அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று
சத்ருஞ்சயன் கேட்டான்.

தந்தை நீண்ட நேரம் சிந்தனையில் இறங்கினார்
'ஒண்டாலா என்றொரு பட்டணமிருக்கிறது. கேட்டி
ருக்கிறாயா?" என்று வினவினார்.

"மேவார் சமஸ்தானத்தின் நாற்பது நகரங்களில்
அது ஒன்று," என்று பதில் சொன்னான் மகன்.

"ஆம். ஆனால், பலமான கோட்டையை
உடையது. வீரர்களின் இருப்பிடம். அபாயம் ஒன்று
அதைச் சூழ்ந்து நிற்கிறது. அங்கு நீ செல்ல வேண்டும்,
என்றார் தந்தை.

*"சரி தந்தையே!"*

*"புரவி ஆகிய எந்த வாகனமும் கூடாது. பாத யாத்திரையாகச் செல்."*

*"உத்தரவு!"*

*"அங்கு எப்படியாவது கோட்டைக்குள் புகுந்து விடு."*

*சத்ருஞ்சயன் தலையை அசைத்தான், ஆமோதிப் பதற்கு அறிகுறியாக. "அந்தக் கோட்டைக்குள் ராஜ வீதிக்குப் போகாதே. வீரர் தெருவென்று தனியாக ஒரு தெரு இருக்கிறது" என்று துவங்கிய தந்தை தன யனை நோக்கினார்; சொற்களைச் சிறிது தேக்கினார்.*

*"சொல்லுங்கள் தந்தையே. அந்தத் தெருவில் நான் யாரைப் பார்க்க வேண்டும்?" என்று மகன் வின வினான்.*

*"மல்லிநாதர் என்ற போர் ஆசான் இருக்கிறார். அவரைச் சந்தித்து சந்திரமதி இருக்குமிடத்தை விசாரி," என்றார் தந்தை.*

*சத்ருஞ்சயன் முகத்தில் அதிர்ச்சி தெரிந்தது. "யார், சந்திரமதியா! பெண்ணா?" என்று வினவினான்.*

*"ஆம். அவள் சாதாரணப் பெண் அல்ல" என்ற தந்தை உட்கார்ந்த நிலையிலிருந்து எழுந்திருந்து, "சத்ருஞ்சயா! அவளை எப்படியாவது இங்கு அழைத்து வரவேண்டியது உன் பொறுப்பு," என்று சொன்னார்.*

மகனும் எழுந்திருந்தான்; வியப்புடன் தந்தையை நோக்கினான். "தந்தையே! நீங்கள் இடும் உத்தரவு ஓர் ஆண் பிள்ளைக்கு இடும் உத்தரவு அல்லவே. அதுவும் ஒரு வீரனுக்கு இடும் உத்தரவாகவும் தெரிய வில்லையே," என்று கேட்கவும் செய்தான். அவன் குரலில் கசப்பும் வெட்கமும் தெரிந்தன.

"சத்ருஞ்சயா! போய்ப் பார், பிறகு விளங்கும் உனக்கு. எப்படியாவது அவளை இங்கு கொண்டு வா," என்றார் பெரிய சலூம்ப்ரா.

"கொண்டு வந்து என்ன செய்வதாக உத்தேசம்?" என்று சத்ருஞ்சயன் கேட்டான்.

"அவளை ராணாவுக்கு மணம் முடிக்க வேண்டும். அவள் மேவார் ராணியானால் மேவார் பிழைக்கும்," என்று பெரிய சலூம்ப்ரா மகனைப் பார்த்துப் புன் முறுவல் செய்தார்.

சத்ருஞ்சயன் முகத்தில் வியப்பு விரிந்தது "மேவார் ராணா பெண் கேட்டாலே போதுமே, அவருக்கு யார் பெண் கொடுக்க மறுக்க முடியும்? பெரிய பதவி அல்லவா மகாராணி பதவி!" என்று வினவினான் வியப்பின் ஊடே.

தந்தையின் முகத்தில் வருத்தத்தின் சாயை படர்ந் தது. "இருமுறை பெண் கேட்டு அனுப்பினோம். ஒரு முறை அவள் இரு வளையல்களை அனுப்பினாள். இரண்டாவது முறை சேலை ஒன்றை அனுப்பினாள். இதில் ஏதாவது ஓர் அவமானத்திற்கே ஒண்டாலா மீது போர் துவக்கியிருக்கலாம். ஆனால் அந்தப்

பெண்ணின் இறுமாப்பை நாட்டின் நலனை முன்னிட்டுச் சகித்துக் கொண்டோம்” என்ற தந்தை சலூம்ப்ரா, “மகனே! உன் மீதுதான் நான் முழு நம்பிக்கை வைத்திருக்கிறேன்!” என்றார். பிறகு மகன் முகத்தைப் பார்க்க நாணி நிலத்தின் மீது பார்வையைச் செலுத்தினார்.

சத்ருஞ்சயன் மனம் பெரும் போர்க்களமாயிருந்தது. ‘ஒரு பெண்ணை இஷ்ட விரோதமாகத் தூக்கி வருவது மொகலாயருக்கு சகஜம். இந்து சமுதாயம் அதற்கு ஒப்புக் கொள்ளாதே’ என்று நினைத்தான்.

மகன் மனத்திலோடிய எண்ணங்களைப் பெரிய சலூம்ப்ரா புரிந்து கொண்டார். “நாட்டு நன்மை முன்னிடும்போது சொந்த உணர்ச்சிக்கு இடமில்லை” என்று மகனை நோக்கிக் கூறி, சரேலென குடிசையைவிட்டு வெளியேற முயன்றவர் சற்றுத் திரும்பி, “தாமதம் செய்யாதே; எங்கும் உட்காராதே. புறப்படு,” என்று திரும்பவும் ஒருமுறை சொல்லி விட்டுப் போனார்.

சத்ருஞ்சயன் ராணா பிரதாப் மடிந்த இடத்தைப் பார்த்தான்; பெருமூச்செறிந்தான்; பிறகு குடிசைக்கு வெளியே நடந்தான். தனது வீட்டுக்குக் கூட அவன் செல்லவில்லை. ஓம்ஸ்தலா நகரத்தை நோக்கித் தனது பயணத்தைத் துவங்கினான். இடையிலிருந்த வாளே துணையாகப் பாதயாத்திரை செய்து ஒண்டாலா கோட்டையருகில் வந்தான். நீண்ட பயணத்தின் விளைவாகச் சற்று உட்கார நினைத்துப் பழைய நிகழ்ச்சிகளை எண்ணினான். தந்தைக்கும் தனக்கும்

நடந்த சம்பாஷணை முழுவதையும் நினைத்துப் பார்த்தான். அப்பொழுதுகூட தந்தை ஆணையை நிறைவேற்றுவது தர்மத்துக்கும் நியாயத்திற்கும் சலூம்ப்ரா வம்ச வீரத்திற்கும் பொருந்துமா என்று நினைத்து, நிச்சயமாகப் பொருந்தாது என்ற முடிவுக்கு வந்தான். ஆனால் தந்தை சொல்லை மீறும் திறன் இல்லாததால் பெருமூச்செறிந்துவிட்டு அந்த மலைவழியில் நடக்க முற்பட்டான். சிறிது தூரத்தில் ஏதோ சலசலப்பு ஏற்படவே அந்தத் திக்கில் கண்களைச் செலுத்தினான். சுமார் நூறு ஆடுகளை ஓட்டிக்கொண்டு வந்தாள் ஒரு பெண்.

சிறிது தூரம் வந்ததும், ஒரு மரத்தில் கட்டப் பட்டிருந்த காளையை அவிழ்த்து அதன்மீது ஏறி உட்கார்ந்து அதன் மூக்கணாங் கயிற்றை அதன் கொம்பிலேயே சுற்றி விட்டாள். பிறகு இடையில் ஒரு புல்லாங்குழலை எடுத்து மிக ரம்மியமாக ஊத ஆரம்பித்தாள். அவள் ஊத மாடு நகர்ந்தது. ஆடுகளும் வரிசையாக நகர்ந்து சிறிது நேரத்தில் ஆடுகள் மலை வழியைக் கடந்தன. கடைசியாக மாட்டில் வந்த பெண் காளை மீது ஒரு புறத்திலே இரு கால்களையும் போட்டுக் கொண்டு அனாயாசமாக உட்கார்ந்திருந்தாள். அவள் கண்கள் மூடிக் கிடந்தன. இதழ்கள் குவிந்து குழலில் ஊத எங்கும் இன்னிசை படர்ந்தது.

அவளைக் கைதட்டிக் கூப்பிட முயன்ற சத்ருஞ்சயன் எடுத்த கைகளைத் தொங்கப் போட்டுக் கொண்டான். அப்பொழுது பக்கத்திலிருந்து ஒரு குரல் எழுந்தது — "நீ புத்திசாலி" என்று. திரும்பி நோக்கினான் சத்ருஞ்சயன். அவன் பக்கத்தில் ஒரு பெரியவர் நின்றி

ருந்தார். "என்ன சொன்னீர்கள்?" என்று அவரைக் கேட்டான் சத்ருஞ்சயன்.

"உன்னைப் புத்திசாலி என்று சொன்னேன். நீ கைகளைத் தட்டியிருந்தால் உன் உயிர் இத்தனை நேரம் எமலோகம் போயிருக்கும்," என்றார் பெரியவர்.

"நீ யார்?" சத்ருஞ்சயன் கேள்வி துரிதமாகப் பிறந்தது.

"மல்லிநாதன்" என்றார் பெரியவர். பிறகு அவர் கேட்டார், "நீ யார்? எந்த ஊர்?" என்று.

"உதயபூர்" என்று ஊரின் பெயர் மட்டும் சொன்னான் சத்ருஞ்சயன்.

பதிலுக்குப் பெரியவர் பைத்தியம் பிடித்தது போல நகைத்தார். "ராணாவுக்குப் பெண் பிடிக்க வந்திருக்கிறாயா?" என்றும் கேட்டார் நகைப்பின் ஊடே.

சத்ருஞ்சயன் பிரமை பிடித்து நின்றான்.

# 2

# வாளும் விறகுக் கட்டும்

பக்கத்தில் நின்ற மனிதர் தன்னை மல்லிநாதர் என்று சொல்லிக் கொண்டதுமே அதிர்ச்சியடைந்த சத்ருஞ்சயன், ராணாவுக்குப் பெண் பிடிக்க வந்திருக் கிறாயா என்று கேட்டதும் பிரமையின் உச்சியை எட்டிவிட்ட காரணத்தால் உணர்ச்சிகளை அடியோடு இழந்து நின்றான். அத்துடன் சற்று திரும்பி மல்லி நாதனையும் உற்று நோக்கினான். மல்லிநாதன் நல்ல ஆஜானுபாகுவாய் ஆறடி உயரத்துக்கு மேல், வலிய உதடுகளில் கட்டு மீசையுடனும், தலையில் சற்று அதிக மாகவே நீண்டு தொங்கிய குழல்களுடனும் காட்சி யளித்தார். அவருடைய உடலின் சிறுசிறு சதைப் பிடிப்பு காரணமாக அவர் உயரம் சரியாகத் தெரியா விட்டாலும் அவர் கழுத்தின் மேல்பகுதிகள் திரண்டு உருண்டு மாமிசப் பிடிப்புடன் இருந்ததாலும், அவருடைய அடர்ந்த கரிய புருவங்களுக்கு அடியில் கண்கள் சிவந்த ராட்ஸதக் கண்களைப்போல் இருந்த தாலும் சாட்சாத் ராட்சஸன் போல விளங்கிய அந்த மனிதருடன் விளையாடுவது மரணத்தை வலிய

அழைப்பதாகும் என்பதைச் சத்ருஞ்சயன் சந்தேகத்துக்கு இடமின்றிப் புரிந்து கொண்டான். அவர் சாதாரண சிறு வேஷ்டியை இடையில் கட்டி அதன் ஒரு பகுதியைப் பின்னால் தார்ப்பாச்சாக இழுத்துக் கட்டியிருந்ததால் அவர் உலக்கை தொடைகள் பயங்கரமாகத் தெரிந்ததையும் அவர் மேலே அங்கி எதையும் அணியாததால் மார்பில் மயிர் மிக அடர்த்தியாக வளர்ந்து பெரிய கரடிபோல் தோற்றமளித்ததையும் அவற்றின் இடைவெளிகளில் தழும்புகள் பல தெரிந்ததால் அவர் பல போர்களைக் கண்டிருக்க வேண்டும் என்பதையும் தீர்மானித்த சத்ருஞ்சயன் அவர் கைகளில் ஏந்தி தோளில் சாய்த்துக் கொண்டிருந்த கோடரியைப் பார்த்து வியந்து புன்முறுவலும் கொண்டான்.

அவன் புன்முறுவலையும், அவன் தன்னை அணு அணுவாக ஆராய்வதையும் கண்ட மல்லிநாதர் தனது பெரிய பயங்கரச் சிரிப்பை நிறுத்தி, "ஆராய்ச்சி முடிந்து விட்டதா சிறுவனே?" என்று வினவினார்.

அவரது குரல் உடலுக்கு மிகவும் ஒத்து, கரகரப்பாகவும், பயங்கரமாகவும் இருந்ததைக் கவனித்த சத்ருஞ்சயன், "பெரியவரே! வீரரான தாங்கள் கோடரியை எதற்காகத் தூக்க வேண்டும்?" என்று வினவினான்.

"ஆடுகளுக்குச் சிறு கிளைகளை வெட்ட; அந்த இலைத் தழைகளை ஆடுகள் தின்ற பிறகு, அவற்றைப் பிளந்து விறகாக உபயோகிக்க இது உதவும்" என்று அதன் இரண்டு வேலைகளை விளக்கிய மல்லிநாதர், "இந்தக் காடுகளில் திருட்டுப் பயமும் உண்டு. இது

தற்காப்புக்குப் பயன்படும்," என்று அதன் மூன்றாவது பயனையும் தெரிவித்தது மட்டுமின்றித் தனக்குப் பின்னால் இருந்த விறகுக் கட்டையும் காட்டினார்.

சத்ருஞ்யன் அந்த விறகுக் கட்டைப் பார்த்தான். 'இவ்வளவு பெரிய வீரர், போர் முறைகளைப் பயிற்று விக்கும் ஆசிரியர், எதற்காக ஆடுகளுக்குத் தழை பறிக்க வேண்டும்? எதற்காக விறகு வெட்ட வேண்டும்' என்று தனக்குள் கேட்டுக் கொண்டான்.

அவன் மனத்தில் ஓடிய எண்ணங்கள் மல்லி நாதருக்கும் புரிந்திருக்க வேண்டும். அவர் மீண்டும் நகைத்து, "சிறுவனே! வீரர்கள் சிறிய காரியங்களைச் செய்யக் கூடாது என்ற விதி ஏதும் இல்லை. அப்படிச் செய்யாமல் இருந்தால் காற்றை மட்டும் விழுங்கிக் கொண்டிருந்தால் தொந்தி பெருத்துவிடும். கிட்டத் தட்ட ராணாவின் மந்த நிலை நமக்கும் வந்துவிடும். இதோ பார் என் வயிற்றை" என்று தமது வயிற்றைத் தட்டிக் காட்டினார்.

அவர் வயிறு அடியோடு உள்ளடங்கி இருந்ததை யும் அந்த நிலையிலும் அது கடையப்பட்ட வைர மரத்துக்கு ஒப்பாக இருந்ததையும் கவனித்தான். இருப் பினும் அவர் ராணாவைப் பற்றி ஏளனமாகப் பேசி யதை அவனால் ரசிக்க முடியாததால், "ராணாவை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?" என்று வினவினான்.

"இல்லை, பார்த்ததில்லை. பார்க்க அவசிய மில்லை" என்றார் மல்லிநாதர் வெறுப்புடன்.

"உங்களைப் போல் அடங்கிய வயிறுதான் அவருக் கும். மிக அழகாயிருப்பார்," என்றான் சத்ருஞ்சயன்.

மீண்டும் நகைத்தார் மல்லிநாதர், "ராஜபுத்திர பெண்கள் அழகை மட்டும் விரும்புவதானால் அவர் அரண்மனை இப்பொழுது பெண்களால் நிரப்பப் பட்டிருக்கும். ஆனால், உண்மையான ராஜபுத்திர னுக்குப் பிறந்த பெண்கள் வீரர்களை விரும்பு கிறார்கள்," என்று நகைப்பினூடே கூறிய மல்லிநாதர், "அதோ போகிறாளே அந்தப் பெண், ராணா கோழை யாக இருப்பதால் அவர் பெயரையே வெறுக்கிறாள்," என்று தூரத்தே ஆடுகளை ஓட்டிக் கொண்டு சென்ற பெண்ணைச் சுட்டிக் காட்டினார்.

அந்தத் திசையில் கண்களைச் செலுத்திய சத்ருஞ் சயன் கண்ணெதிரே கண்ட காட்சியால் சிலையென நின்றான். மலை வாயிலில் கதிரவன் இறங்க முற்பட்டு விட்டதால் வானம் மிகச் சிவந்து, செவ்விய கிரணங் களை எங்கும் பரப்பி காளை மீது அமர்ந்த அந்தப் பெண்ணை மிகச் சிவப்பாக அடித்துவிட்டதால், வானத்தை நாடிச் செல்லும் தேவ மங்கை போல அவள் காட்சியளித்தாள்.

அவள் ஓட்டிச் சென்ற வெள்ளை ஆடுகளும், உட்கார்ந்திருந்த மாடும் கையிலேந்தி ஊதிய குழலும் எல்லாமே சிவப்பு மயமாக மாறியிருந்தது தனி அழகை அந்தச் சூழ்நிலைக்கு அளித்திருந்தது. அத்தச் சூழ் நிலையைச் சிறிதும் கவனிக்காமல் காளை மீது உட்கார்ந்திருந்த அந்த மங்கையின் செவ்விய உதடுகளி

லிருந்து வெளிவந்த வேணுகானம் அந்தப் பகுதியை நாத மயமாக அடித்திருந்தது. அவள் தூரத்தே சென்று விட்டதால் அவளை முழுமையாகப் பார்க்க முடியா விட்டாலும், வளைந்தும், எழுந்தும் குறுகியும் சென்ற உடற்பகுதிகளால் ராஜ புதனத்தின் சிறந்த அழகியைப் பார்த்துவிட்ட உணர்ச்சியைப் பெற்றான் சத்ருஞ்சயன்.

அப்படிப் பார்ப்பது நாகரிகமல்ல என்பதையும், மல்லிநாதர் அருகில் இருக்கும்பொழுது அவளை அதிகமாகப் பார்ப்பதில், அதிகமான அபாயம் இருக்கும் என்பதையும் புரிந்துகொண்ட சத்ருஞ்சயன், தனது பார்வையை மீண்டும் மல்லிநாதர் மீது திருப்பி, "பெரியவரே! அந்தப் பெண் யாரோ?" என்று கேட் டான்.

"நீ பிடிக்க வந்திருக்கும் பெண்" என்று மல்லி நாதர் சொன்னார். "அவளை மணப்பதைவிட மரணத்தை மணக்கலாம்," என்றும் தெரிவித்தார்.

இதுவரை சாத்வீகமாக இருந்த சத்ருஞ்சயன் பெரியவரின்மீது உஷ்ணமான தனது விழிகளைத் திருப்பி, "பெரியவரே! உமது வயதை உத்தேசித்து உம்மை விட்டு விடுகிறேன். உம்மை நாடி வந்த காரி யத்தை உத்தேசித்து உமது தூஷணைகளைப் பொறுத் துக் கொள்கிறேன்" என்றான், குரலில் உஷ்ணத்தைக் காட்டி.

பெரியவர் அவனது கோபத்தை லட்சியம் செய்த தாகத் தெரியவில்லை. "நீ வந்த காரியம் என்ன?" என்று சர்வ சாதாரணமாகக் கேட்டார்.

“தங்களிடம் வித்தை பயில வந்தேன்,” என்றான் சத்ருஞ்சயன்.

“நான் வித்தை சொல்லிக் கொடுப்பதாக யார் சொன்னது?” என்று கேட்டார் மல்லிநாதர். அவர் கேள்வியில் சந்தேகம் இருந்தது.

“என் தந்தை” என்று தெளிவாகவும் நிர்ப்பய மாகவும் பேசினான் சத்ருஞ்சயன். “அவர்பெயர் சந்த சிம்மன். சலூம்ப்ரா வம்சம்.”

இம்முறை வியந்தார் மல்லிநாதர். “என்ன சொன் னாய் சந்தசிம்மன் புதல்வனா? சலூம்ப்ரா வம்சத் தவனா? உன் தந்தை மகா வீரர். அவர் சொல்லிக் கொடுக்க முடியாத எதை நான் சொல்லிக் கொடுக்க முடியும்?” என்று வினவினார் வியப்பைச் சிறிது உதறிக் கொண்டு.

“உன் புரவி எங்கே?” என்று சந்தேகத்துடன் வின வினார் மல்லிநாதர். சத்ருஞ்சயன் மல்லிநாதருக்குத் தலைவணங்கி, “புரவியில் வரவில்லை,” என்றான்.

“ஏன்?” மல்லிநாதர் ஒற்றைச் சொல் கேள்வியை வீசினார்.

“மாணவனாகப் போகிறவன் படாடோபமாகப் போகக்கூடாது. பாத யாத்திரையாகத்தான் போக வேண்டும் என்று என் தந்தை உத்தரவிட்டார்.”

“உம்... உம்” என்ற மல்லிநாதர், “சலூம்ப்ராவின் பிடிவாதம் இன்னும் போகவில்லை. சரி வா

போவோம்” என்றவர் சிறிது தயங்கினார். சத்ருஞ் சயன் அவர் தயக்கத்தைப் பார்த்தான்.

“ஏன் தயங்குகிறீர்கள்?” என்று கேட்கவும் செய் தான். “மாலை வேளைக்குப் பிறகு கோட்டைக் குள் யாரையும் விட மாட்டார்கள்,” என்றார் மல்லி நாதர்.

“ஏன்?”

“ராணாவின் ஒற்றர்கள் உட்புகுவதைக் கண்டு கோட்டைத் தலைவன் அஞ்சுகிறான். அதனால் மாலைக்குப் பிறகு வருபவர்கள் சிறைக்குள் தள்ளப் படுகிறார்கள். மறுநாள் விசாரணைக்குப் பின்புதான் விடுதலை.” இதைச் சொன்ன மல்லிநாதர் சிறிது சிந்தித் தார். சிந்தனைக்குப் பிறகு “சிறுவனே! உன் வாளைக் கொடு” என்று கையை நீட்டினார். சத்ருஞ்சயனும் சிந்தித்து, “வாள், புரவி, மனைவி மூவரையும் பிரிவது ராஜபுத்திரர் வழக்கம் அல்லவே,” என்றான்.

இளநகை கொண்ட மல்லிநாதர், “அதெல்லாம் பழைய வழக்கம். நாம் மொகலாயர்களுக்குப் பெண் களைக் கொடுத்தாகி விட்டது. சரி எடு வாளை!” என்று கையை நீட்டினார்.

சத்ருஞ்சயன் இடைக் கச்சையில் இருந்த வாளை எடுத்துக் கொடுத்ததும் அதை விறகுக் கட்டில் விறகு களுக்கு மத்தியில் சொருகினார்.

“சிறுவனே! விறகுக் கட்டையைத் தூக்கிக்கொள்,” என்றார்.

சத்ருஞ்சயன் பதில் ஏதும் சொல்லாமல் விறகுக் கட்டை அனாயாசமாகத் தூக்கித் தோளில் வைத்துக் கொண்டான். "இனி போகலாம்" என்ற மல்லிநாதர் முன் நடக்கப் பின் நடந்தான் சத்ருஞ்சயன். நடந்து கொண்டே கோட்டை வாசலைக் கவனித்தான். திடீரெனக் குழலோசை நின்றது. ஆடுகள் பெரிதாகச் சத்தம் போட்டுக் கொண்டு கோட்டை வாசலுக்குள் நுழைந்து விட்டன. இருளும் மூண்டு விட்டது. கோட்டை வாசல் விளக்குகள் கொளுத்தப்பட்டன.

இரவு நேரத்தில் கோட்டை மிக வலுவாகவும் அதே சமயத்தில் அழகாகவும் தெரிந்தது. வாயிற் கதவுகள் சாத்தும்போதும் திறந்தபோதும் சத்தம் அணு வளவும் இல்லை. கதவுகள் நன்றாகப் பக்குவத்தில் வைக்கப்பட்டிருப்பதை உணர்ந்த சத்ருஞ்சயன் ஆசானுக்குப் பின்னால் மௌனமாக நடந்தான். மல்லிநாதரும் பேசவில்லை. தீர்க்கமான சிந்தனை யுடன் மௌனமாகவே நடந்தார். கோட்டை வாசலை அணுகியதும் அவரைக் கண்ட கோட்டைக் காவலர் கதவுகளைப் திறந்தார்கள் துரிதமாக. அவர் நுழைந்த தும் அவருக்குப் பின்னால் நுழைந்த சத்ருஞ்சயனை "நில்" என்று தடுத்தனர் காவலர்கள்.

மல்லிநாதர் சுடுவிழிகள் அவர்களை எரித்து விடு வனபோல் பார்த்தன.

"மல்லிநாதன் ஆட்களை நிறுத்தும் துணிவு ஏற் பட்டுவிட்டதா உங்களுக்கு?" என்று சீறினார்.

"இவன் சாதாரண ஆளாகத் தெரியவில்லை
என்றான் ஒரு காவலன்.

"வேறு யாராகத் தெரிகிறான்?" சீறினார் மல்
நாதர்.

"நல்ல வம்சத்தவன் போல் தெரிகிறான் " எ
றான் இன்னொரு காவலன்.

"நல்ல வம்சத்தவர் என்னிடம் போர் பயில்
தில்லையா?" என்று கேட்டார் மல்லிநாதர் இறுக
பல்லைக் கடித்துக் கொண்டு.,

அந்தச் சச்சரவைத் தூரத்தில்இருந்து கேட்டு
கொண்டிருந்த காவலர் தலைவன், "இங்கு என்
சச்சரவு? மல்லிநாதரை ஏன் தடுக்கிறீர்கள்?" என்
கேட்டுக் கொண்டு வந்தான்.

மல்லிநாதர் விறகுகளைத் தூக்கிய சத்ருஞ்சயனை
மட்டும் பார்க்கவில்லை அவன். விறகுக் கட்டையு
கவனித்தான். அதன் இடையில் செருகப்பட்டிருந்
வாளின்பிடி விளக்கு வெளிச்சத்தில் பளபளத்ததையு
கவனித்தான்.

# 3

# மல்லிநாதர் இல்ல வழக்கம்

காட்டு விறகுக் கட்டை விளக்கு வெளிச்சத்தில் கவனித்து அதில் ஒரு வாள் செருகியிருந்ததையும் பார்த்த தால் சற்று நிதானித்த கோட்டைக் காவலர் தலைவன், "மல்லிநாதரை ஏன் தடை செய்கிறீர்கள்?" என்று மற்ற இரு காவலர்களையும் நோக்கி வினவினான்.

"அவரைத் தடை செய்யவில்லை. உடன் வந்த இந்த வாலிபனைத்தான் தடை செய்தோம்," என்றான் ஒரு காவலன்.

"இவனைத் தமது ஆள் என்று குருநாதர் சொல்லு கிறார். இவனைப் பார்த்தால் விறகு"தூக்கும் ஆளாகத் தெரியவில்லை." என்றான் இன்னொரு காவலன்.

"விறகு தூக்கும் வேலை பயின்றவனாகவும் தெரிய வில்லை. அவன் தோளில் கட்டைச் சுமந்துள்ள முறையே அதற்கு அத்தாட்சி," என்றான் முதலில் பேசிய காவலன்.

கோட்டைக் காவலர் தலைவன் முகத்தில் சினத் தின் சாயை பரவியது, "மல்லிநாதரின் சொற்களைச்

சந்தேகிக்கும் நிலைக்கு நீங்கள் உயர்ந்துவிட்டீர்களா?' என்று வினவினான் தலைவன்.

"எசமான்!" என்று அச்சத்துடன் அழைத்தான் சச்சரவை ஆரம்பித்த காவலன்.

"என்ன?" தலைவன் கேள்வியில் சினம் அதிகமாகத் தெரிந்தது.

"தாங்கள்தானே சந்தேகப்படக் கூடியவர் யாராயிருந்தாலும் உள்ளே அனுமதிக்கக் கூடாது என்று கண்டிப்பான உத்தரவிட்டிருக்கிறீர்கள்!" என்றான் காவலன் பயத்துடன்.

"ஆம், இட்டேன்." தலைவனின் பதில் காட்டமாக இருந்தது.

"அதனால்தான் தடுத்தோம்."

"அப்படியா!"

"ஆம் எசமான்."

"நமது கோட்டைத் தலைவர் வந்தால், அவர் யாரையாவது அழைத்து வந்தால், அவர்களையும் தடை செய்வாயா?"

இதற்குப் பதில் சொல்ல முடியாமல் தவித்தான் காவலன். அவன் தவிப்பை விலக்க முற்பட்ட தலைவன், "எந்த உத்தரவுக்கும் விலக்கு உண்டு. தராதரம் பார்த்துப் பணியாற்றுவது விவேகம்," என்று கூறிவிட்டு, "இவர்களுக்கெல்லாம் திறமை போதாது.

மன்னித்துவிடுங்கள். நீங்கள் இல்லம் செல்லுங்கள்," என்று மல்லிநாதரை நோக்கிக் கூற மல்லிநாதர் சத்ருஞ் சயனை அழைத்துக் கொண்டு கோட்டை வீதி களுக்குள் சென்றார்.

இரண்டு வீதிகளைக் கடந்து போர் வீரர் வீதிக்கு வந்ததும் பலபெரிய வீடுகளைத் தாண்டி நடந்தார். கடைசியாக ஒரு சிறு வீட்டின் முன்பு நின்றவர் வீட்டைச் சுற்றி சத்ருஞ்சயனை அழைத்துக் கொண்டு பின்புறம் சென்று, அங்கிருந்த கொட்டகையில் விறகுக் கட்டைப் போடச் சொன்னார். அவன் தோளி லிருந்து விறகுக்கட்டை இறக்குவதற்கு முன்பு அதன் நடுவிலிருந்த வாளையும் எடுத்துக் கொண்டார்.

வாளைப் பெற்றுக் கொள்ள கையை நீட்டினான் சத்ருஞ்சயன். "இப்பொழுது உனக்கு வேண்டாம்" என்ற மல்லிநாதர் வீட்டுக்குள் நுழைய முற்பட்டவர், "சந்திரமதி?" என்று குரல் கொடுத்தார்.

"இதோ வருகிறேன்" என்று உள்ளிருந்து குரல் கொடுத்த சந்திரமதி, சில வினாடிகளில் வெளியே வந்தாள். வெளியே வந்தவள் சட்டென்று பின் வாசற் படியைத் தாண்டாமலே தனது முக்காட்டைப் போட்டுக் கொண்டு, "இவர் யார்?" என்று கேட்டாள்.

"என் புதிய சீடன்" என்ற மல்லிநாதர், "இவன் தலையில் ஒரு குடம் தண்ணீர் கொட்டு. பிறகு இவன் கிணற்றில் நீராடி விட்டு உள்ளே வரட்டும்" என்று கூறிவிட்டு வாளை ஏந்திய வண்ணம் உள்ளே சென்றார்.

அவர் சென்றதும் முக்காடை நன்றாகவே இழுத்து விட்டுக் கொண்ட சந்திரமதி, "சீடப் பிள்ளையே! சற்று இருங்கள்; தண்ணீர் கொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு உள்ளே செல்ல முயன்றவளை, "அம்மணி!" என்று அழைத்தான் சத்ருஞ்சயன்.

அவள் சட்டென்று திரும்பி அவனை நோக்கி னாள். அந்த விழிகளைக் கண்ட சத்ருஞ்சயன் மயக்கம் பிடித்தவன் போல் நின்றான். அந்த விசால விழிகளை, அமுத விழிகளென்று சொல்ல முடியாவிட்டாலும் அவற்றின் கூர்மையின் விளைவாக வேல் விழிகள் என்று சொல்லலாம் என்று நினைத்தான். புழக்கடை விளக்கு வெளிச்சத்தில் அவள் தேகம் மிக மெல்லிய தாகக் காணப்பட்டது. அதிக உயரமில்லாவிட்டாலும் நீண்ட மரமல்லி புஷ்பம் போல விளங்கினாள் சந்திர மதி. அவள் சந்திர முகத்தை வைத்துத்தான் அவளது பெற்றோர் அந்தப் பெயரை அவளுக்குச் சூட்டியிருக்க வேண்டும் என்று சத்ருஞ்சயன் நினைத்தான். அந்த சந்திரமுகத்தில் தலையிலிருந்து பிரிந்து விழுந்த குழல்கள் இரண்டு அந்த முகத்தில் நடுவில் சுருண்டு நின்றன.

அந்தக் குழலின் சுழற்சி, அவள் உதடுகள் குங்குமப் பொட்டின் சிவப்புடன் போட்டி போட்ட தன்றி சிறிது நீரோட்டத்தையும் கலந்து கொண்டதால் அவை மாணிக்கம் போல் பளபளத்த அழகு, இவை அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. 'ஆனால் இத்தனை அழகிய உதடுகளில் ஒரு கடுமையும் இருப் பது அத்தனைப் பொருத்தமாயில்லை' என்று சத்ருஞ்

சயன் உள்ளூர நினைத்தான். முகத்திலிருந்து கழுத் துக்கு இறங்கிய பார்வை, சற்றே எழுந்தாலும் அடக் கத்துடன் இருந்த மொட்டுகள் தன்னை நோக்கிப் பாயும் மாறன் அம்புகள் போல் இருந்தது அந்த வாலிபனுக்கு. அவள் சிறிய இடையும், கீழே இறங்கிய பருவக்கால் பகுதிகளும் அவனுக்குச் சிறிது பயத்தை யும் கூட அளித்தன.

அவன் அவளைக் கவனித்த சில வினாடிகளில் அவளும் அவனைக் கவனித்தாள். அவன் குழந்தை முகத்தில் ஈட்டிகளெனப் பளபளத்த கண்களும், மெல் லிய அரும்பு மீசையும், கைகளின் நீளமும், கால்களின் உரமும், இடுப்பின் வன்மையும், அவன் மாவீரனென் பதையும், அவன் இளவயதைக் கண்டு அவனிடம் வம்பு வைத்துக் கொள்வது அபாயமென்பதையும் அவள் உணர்ந்தாள்.

இப்படி அவனை அதிகமாகப் பார்த்துவிட்டதால் சிறிது நாணமடைந்த சந்திரமதி, "உடை வைத்திருக் கிறாயா?" என்று கேட்டாள்.

அவளது குரல் குழலோசையைவிட இன்பமா யிருப்பதைக் கண்ட சத்ருஞ்சயன், "நான் நீராடினால் வேறு உடை கிடையாது" என்று தெரிவித்து நிலத்தை நோக்கினான்.

அப்படி அவன் தலை குனிந்து நின்றதை நோக்கிய தால் சற்றே இளநகை கொண்ட சந்திரமதி, "வேறு உடை தருகிறேன். முதலில் நீராடுங்கள்." என்று சொல்லிவிட்டு உள்ளே சென்று ஒரு குடம் நீர்

கொண்டு வந்தாள். "அப்படியே உட்காருங்கள்" என்று அவள் பணிக்க, தரையில் மண்டியிட்டு அடங்கி ஒடுங்கி உட்கார்ந்த சத்ருஞ்சயனை நோக்கி நடந்து வந்த சத்திரமதி அவனை நெருங்கியதும் தனது சிற்றாடையைச் சிறிதளவு தூக்கி இடையில் செருகிக் கொண்டாள், ஆடை நனையாது இருப்பதற்காக.

அப்படி அவள் ஆடையைச் சிறிது தூக்கியதில் கண்களுக்குப் புலனான அழகைக் கண்டு பிரமித்தான் அந்த வாலிபன். பஞ்சலோக விக்ரகத்தின் கால்களைப் போன்ற அழகிய உரமான கால்கள், முழங்காலின் மீது சிறிதளவு தலைநீட்டிய மென்மையான தொடைப் பகுதி, மலர்ப்பாதத்தின் செம்பருத்தி இதழ்கள் இவற் றைத் தான் கவனிப்பதை அவள் பார்த்துவிடப் போகி றாளோ என்று கண்களைத் தனது இரு கைகளாலும் மூடிக் கொண்டு தலையைக் குனிந்தான் சத்ருஞ்சயன்.

அவன் கண்கள் பாய்ந்த இடங்களை சந்திரமதி கவனித்தாலும் அதை லட்சியம் செய்யவில்லை. 'ஆண் களின் பலவீனம்' என்று வெறுப்புடன் சொல்லிக் கொண்டு, அவன் தலைமீது குடத்து நீரை மெதுவாக விட்டாள். குழல் நனைய வேண்டுமென்பதற்காக குடத்தைச் சுழற்றி நீரை அவன் தலையில் ஊற்றி விட்டுக் குடத்தையும் அவன் எதிரில் பட்டென்று வைத்து, "அந்தக் கிணற்றில் நீராடிவிட்டு வாருங்கள்; உடை எடுத்து வருகிறேன்," என்று சொல்லி மேலே எடுத்து செருகிய சீலையைத் தொங்கவிட்டு, கண் குத்திப் பாம்பு போல் பார்த்துக் கொண்டிருந்த வாலி பன் கண்களை ஏமாற்றி வேகமாக உள்ளே சென்றாள்.

*அவள் போவதைப் பார்த்துக் கொண்டு நின்றான் சத்ருஞ்சயன். அவள் சென்ற வேகத்தில் அழகிய அவள் கழுத்து, முதுகு முதலிய பின்னழகுகளை யெல்லாம் கபளீகரம் செய்து கொண்டு, உடலெங்கும் நீர் சொட்ட நின்றிருந்த சத்ருஞ்சயன் சுயநிலை அடைந்து குடத்தை எடுத்துக்கொண்டு கிணற்றடிக்குச் சென்றான். அங்கிருந்த கயிற்றை எடுத்து நீரைக் குடத்தில் இழுத்து இழுத்து அலுப்புத் தீர நீராடினான். பிறகு கிணற்றின் எதிர் மறைவுக்குச் சென்று தனது கால்சராயையும் அங்கியையும் பிழிந்து கொண்டான்.*

*அந்தச் சமயத்தில் ஒரு காவிப்பட்டை எடுத்துக் கொண்டு கிணற்றடிக்கு வந்த சந்திரமதியிடம், "அப் படியே நில்லுங்கள். ஒரு குச்சியால் ஆடையை நீட்டுங் கள்," என்று கூறினான்.*

*அவன் நிலை அவளுக்குப் புரிந்தது. அங்கியில்லா மார்பும், அவன் கையில் காட்சியளித்த முறுக்கிப் பிழிந்த துணியும் புரிய வைத்தன. குச்சிகளால் உடை யை நீட்டியதும் அதை எட்டி ஒரு கையால் வாங் கினான். உடையை அணிந்த பின்பும் அந்த இடத்தை விட்டு அவன் நகரவில்லை. அவன் அந்தக் காவிப் பட்டை உடுத்திக்கொண்டு வெளி வந்த பிறகு திலக சாயத்தை நீட்டினாள். அதை எடுத்து நெற்றியில் தரித்துக்கொண்ட சத்ருஞ்சயன் கேட்டான், "இந்த நீராட்டம் எதற்கு?" என்று.*

*காரணத்தைச் சந்திரமதி விளக்கினாள். யாவும் புதுவிதமாக இருந்தது. ராஜபுத்திரர் வழக்கத்துக்கு விரோதமாகவும் இருந்தது.*

# 4
# ஜலதரங்கம்

ஓம்ஸ்தலா என்ற ஒண்டாலாவுக்கு வந்ததும் வராததுமாகத் தன்னைத் தலையில் நீர் ஊற்றி மூழ்க வைத்ததற்கு சந்திரமதி கூறிய காரணத்தைக் கேட்டதும் வியப்பே அடைந்தான் சத்ருஞ்சயன்.

"உங்கள் தலையில் நீர் ஊற்ற எந்த விநாடியில் தந்தை உத்தரவிட்டாரோ அந்த விநாடியில் நீங்கள் அவரது சீடராகிவிட்டீர்கள். எந்தப் புதுச் சீடனும் எங்கள் வீட்டுக்குள் நுழையுமுன்பாக நீராடிப் புத்தாடை புனைந்துதான் நுழைய வேண்டும். நுழைந்ததும் எங்கள் வீட்டு முன்னறையில் இருக்கும் சாளக்கிராமத்தை வணங்க வேண்டும். அப்பொழுது முதன் முதலாக உங்களுக்கு மாற்று மந்திரோபதேசம் செய்யப்படும். அந்த நிமிஷம் முதல் நீங்கள் மல்லிநாதரின் சீடராக ஏற்றுக் கொள்ளப்படுவீர்கள். அப்புறம் இந்த ஊரில் உங்களை யாரும் எந்தத் தொந்தரவும் செய்ய மாட்டார்கள். நீங்கள் இஷ்டப்படி இந்தக் கோட்டையில் எங்கும் உலாவலாம்," என்று சொன்னாள் சந்திரமதி.

இதைச் சொன்ன சந்திரமதி புதுச் சீடனைச் சற்று ஏறெடுத்துப் பார்த்தாள். அவள் அளித்த காவிப் பட்டை இடையில் அணிந்து மேலே ராஜபுத்திரர்களுக்கான முப்புரி நூல் மட்டுமே தெரியும்படியாக நின்ற அந்த வாலிபனின் அகன்ற மார்பையும், கரிய சருமத்தையும், மார்பில் தெரிந்த சில தழும்புகளையும், நீண்ட வலுவான விரல்களையும் பார்த்த சந்திரமதி, வாள் வித்தைக்கு அவன் புதியவனல்லன் என்பதைப் புரிந்து கொண்டாள். நீண்ட நேரம் அவனைத் துருவிப் பார்ப்பது சரியல்ல என்ற உணர்வு ஏற்படவே திடீரெனத் திரும்பிய சந்திரமதி, “வாயிற் பக்கமாக வாருங்கள், அங்கே தந்தை இருப்பார்” என்று சொல்லி விட்டு வேகமாக் உள்ளே நடந்தாள்.

அவள் கண்ணுக்கு மறையும் மட்டும் அவளைப் பார்த்துக் கொண்டிருந்த சத்ருஞ்சயன் தனது ஆடைகளை மீண்டும் ஒருமுறை நன்றாகப் பிழிந்து தோளில் போட்டுக் கொண்டு, வீட்டைப் பக்க வாட்டில் சுற்றி வாயிற்புறமாக வந்தான். அங்கு அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்த மல்லிநாதர் முதன் முதலாக அவன் பெயரை உச்சரித்தார் “சத்ருஞ்சயா!” என்று.

சத்ருஞ்சயன் மறுபடியும் ஆச்சரியத்தின் வசப் பட்டான். அதுவரை தனது பெயரைச் சொல்லா திருக்கும்போது அவர் எப்படிப் பெயரைத் தெரிந்து கொண்டார் என்பது அவிழ்க்க முடியாத புதிராய் இருந்தது அந்த வாலிபனுக்கு. “குருநாதா! என் பெயர் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?” என்று வினவினான்.

"உன் தந்தையின் பிரதாபத்தை நீண்ட நாளாக நான் அறிவேன்," என்றார் குருநாதர்.

"என் தந்தையின் பிரதாபத்தையா?" என்று ஏதும் புரியாமல் கேட்டான் புதுச் சீடன்.

மல்லிநாதர் சிரித்துவிட்டுச் சொன்னார்: "சிறுவனே! ராஜபுத்திரர்கள் சாதாரணமாக ஒரு மனைவியோடு நிற்பதில்லை. குறைந்த பட்சம் இரண்டு மூன்று மனைவிகளையாவது அடைவார்கள். ஆனால் உன் தந்தை, தாய் இறந்து போனதும் வேறு யாரையும் திரும்பிப் பார்க்கவும் மறுத்தார். உன்னை வளர்த்து ஆளாக்குவதிலேயே முனைந்தார். இப்பொழுது வித்தை கற்க என்னிடம் அனுப்பியிருக்கிறார். உன் தந்தைக்கு மேவாரைத் தவிர வேறெதுவும் தெரியவும் தெரியாது. எனக்கு ஒரு பெண் இருப்பதுகூட அவருக்குத் தெரியாது. சந்திரமதி யாரோ என்று நினைத்துக் கொண்டிருப்பார்," என்று விளக்கிய மல்லிநாதர் மெதுவாக நகைத்து, "அவருக்கு ஒரே பிள்ளை, சத்ருஞ்சயன் என்று பெயர். மாவீரன் என்று ஊரெல்லாம் சொல்லக் கேள்விப்பட்டேன். ஆகையால் நீ வித்தை பயில வந்திருப்பதாகக் கூறுவதுகூட எனக்கு விந்தையாயிருக்கிறது. சரி வா, உள்ளே போகலாம்." சத்ருஞ்சயனை உடன் வரும்படி சைகை காட்டி உள்ளே புகுந்தார்.

அந்த வீடு முன்கட்டில் பார்ப்பதற்குச் சிறியதாயிருந்தாலும் அங்கிருந்த கூடம் மிகப் பெரியதாக இருந்தது. அங்கே போர்க் கருவிகள் பலவும் மூலைகளிலும் பக்கச் சுவர்களிலும் சாத்தப்பட்டிருந்தன.

அதன் ஒரு மூலையின் கோடியில் மட்டும் சிறு விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. அதற்குப் பின்னால் சிறு பெட்டகம் இருந்தது.

"சத்ருஞ்சயா அந்தப் பெட்டகத்தைத் திற" என்று மல்லிநாதர் உத்தரவிட, மெதுவாக அதை நோக்கி நடந்து சென்று சத்ருஞ்சயன் பெட்டகத்தைத் திறந் தான். பெட்டகத்துக்குள் வைர வைடூரியங்கள் இருந் தன. "குருநாதா! இவற்றை என்ன செய்யட்டும்?" என்று கேட்டான்.

"வைரக் கற்களை நீக்கிவிட்டு அடியிலிருக்கும் சாளக்கிராமத்தை எடு?" என்றார் மல்லிநாதர்.

வைரங்களையும் வைடூரியங்களையும் நீக்கிய சத்ருஞ் சயன் அவற்றின் அடியில் பளபளவென்று இருந்த சாளக்கிராம மூர்த்தியைக் கையில் எடுத்துக் குருவை நோக்கி நடந்தான். அவன் அவரை நோக்கியதும் உள்ளிருந்து கூடத்துக்குள் சந்திரமதி நடந்து வந்தாள் ஒரு தட்டுடன்.

அந்தத் தட்டில் ஒரு வட்டிலில் நீரும் உத்தி ரணியும் இருந்தன. சந்தனம் ஒரு பக்கத்தில் வைக்கப் பட்டிருந்தது. உதிரி புஷ்பங்களும் காணப்பட்டன.

"சத்ருஞ்சயா, சாளக்கிராம மூர்த்தி மீதும் வாயி லும் சந்தனத்தை வைத்துவிடு. பிறகு அதைப் பெட்ட கத்தில் வை?" என்று தூரத்திலிருந்தே உத்தரவிட்டார்.

குரு சொன்னபடி சத்ருஞ்சயன் செய்தான். "சந்திரமதி! உத்திரணியில் நீரெடுத்துக் கொடு

அவனிடம். அவன் ஆசமனம் சமர்பிக்கட்டும் மூர்த் திக்கு," என்றார்.

"அச்சுதா, அனந்தா, கோவிந்தா" என்று சொல்லி மும்முறை உத்திரணியால் நீரை எடுத்து ஸ்வாமி முன்பு காட்டிய பிறகு அந்த நீரை வட்டிலில் ஊற்று வது சாளக்கிராம ஆசமனம். க்ஷத்திரிய வழக்கப்படி அந்த ஆசமனம் செய்து முடித்த சத்ருஞ்சயனை நோக்கி, "அடுத்து புஷ்பங்களை எடுத்து அர்ச்சனை செய்," என்று கூறினார். "அர்ச்சனைக்குப் புஷ்பத்தை அவன் கையில் கொடு சந்திரமதி" என்று மீண்டும் உத்தரவிட்டார்.

சந்திரமதி திகிலடைந்து தந்தையைத் திரும்பிப் பார்த்தாள். அவர் முகத்தில் புன்முறுவல் இருந்தது. "மகளே! சொன்னபடி செய்" என்றார் கண்டிப்புடன். அதற்குமேல் ஆட்சேபனை சொல்லாமல் தனது இடது கையால் தட்டைப்பிடித்துக் கொண்டு, வலது கையால் புஷ்பங்களை ஒவ்வொன்றாக எடுத்துக் கொடுக்க, தூரத்திலிருந்தவாறு அர்ச்சனை மந்திரங் களை மல்லிநாதர் ஓத, புஷ்பார்ச்சனை செய்தான் சத்ருஞ்சயன்.

அர்ச்சனை முடிந்ததும் தீபாராதனை காட்டிய போது ஹயக்ரீவ மந்திரத்தை இரந்து சொன்னார் மல்லிநாதர். அது முடிந்ததும், "சத்ருஞ்சயா! இப் பொழுது நீ பூஜை செய்திருப்பது ஹயக்ரீவமூர்த்தியை. கூழாங்கல்லைப் போலிருக்கும் அந்த மூர்த்திதான் ஹயக்ரீவர். நேபாளத்தில் கண்டகி நதியில் இருந்து

நானே எடுத்து வந்தேன். ஹயக்ரீவர் வித்தைக்கு அதி பதி. அவரை பூஜை செய்ததாலும் நீ சற்று முன்பு ஏற்றிய ஜ்வாலை அணையாமல் நின்றதாலும், நீ அவர் கருணைக்குப் பாத்திரமாகப் போகிறாய். மூர்த்தியைத் தண்டனிட்டுப் பெட்டகத்தை மூடிவிட்டு வா. இன்று உன் குருகுலவாசம் தொடங்கிவிட்டது," என்றார்.

அது முடிந்ததும் சந்திரமதி தந்தையை வணங் கினாள். "இரண்டு பேருமே வணங்குங்கள்" என்று மல்லிநாதர் உத்தரவிட சத்ருஞ்சயனும் சந்திரமதிக்கு அருகாமையில் மண்டியிட்டுக் குருநாதரை வணங் கினான்.

அடுத்து அவனுக்கு வேறு உடை கொடுத்து உண வும் அளித்தார் மல்லிநாதர். உணவை சந்திரமதி பரி மாறுவாள் என்று எதிர்பார்த்த சத்ருஞ்சயன் ஏமாற்றமே அடைந்தான். பூஜைக்குப் பின் சந்திரமதி அவன் இருந்த இடத்தில் தலைகாட்டவே இல்லை.

மல்லிநாதரே இரண்டு கலங்களில் உணவைப் பரிமாறி சீடனுடன் தானும் உட்கார்ந்து சாப்பிட்டார். கலங்களையும் அவரே எடுக்க முற்பட்டபோது சத் ருஞ்சயன் அவரைத் தடுத்து கலங்களை அவரிட மிருந்து பிடுங்கிக் கொண்டு கிணற்றுப்புறம் சென்று தட்டுகளை அலம்பிக் கொண்டுவந்தான். அவனே இருவர் உணவருந்திய இடத்தையும் துடைத்தான்.

"இதெல்லாம் நீ எதற்காகச் செய்ய வேண்டும்?" என்று மல்லிநாதர் கேட்டார்.

“குருவுக்குச் சீடன் பணிவிடை செய்தால்தான் வித்தை வரும் என்று பெரியவர்கள் சொல்கிறார்கள்,” என்றான் சத்ருஞ்சயன்.

“குரு எப்படி இருந்தாலும் நீ பணிவிடை செய் வாயா?” என்று கேள்வியைத் தொடுத்தார் மல்லி நாதர்.

“கண்டிப்பாகச் செய்வேன்,” என்றான் சீடன்.

மல்லிநாதர் எதற்கோ நகைத்தார். பிறகு அவனைப் படுத்துக் கொள்ளச் சொன்னார். “உம்... வாளைக் கொடுங்கள்” என்று கேட்டான் சத்ருஞ்சயன்.

“எதற்கு?” குருநாதர் கேட்டார்.

“அதைப் பக்கத்தில் வைத்துக் கொண்டிருந்தால் தான் எனக்குத் தூக்கம் வரும். அதைப் பிரிந்து படுத்த தில்லை,” என்றான் சத்ருஞ்சயன்.

“இன்னும் சில தினங்களுக்கு உனது வாளை மறந்துவிடு. என்னிடம் நூற்றுக்கணக்கான வாட்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றை எடுத்துக்கொள்” என்றார்.

“என் வாளை ஏன் மறக்க வேண்டும்?”

“அதில் சலூம்ப்ரா முத்திரை பொறிக்கப் பட்டிருக்கிறது.”

“அதனால் என்ன?”

“நீ சிறைப்படுவாய்” என்ற மல்லிநாதர், “சத்ருஞ் சயா! கோட்டை வாயிலில் காவலர் தலைவன் விறகுக் கட்டை சோதனை செய்தபோது உன்வாளைப் பார்த்து விட்டான். ஆனால் பார்க்காதது போல் பாசாங்கு செய்தான். நீ மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். காவலர் தலைவனும் ராஜபுத்திரன். மிகக் கூர்மையான புத்தியை உடையவன்,” என்று எச்சரித்தார்.

அதைக் கேட்டுக் கொண்டு குருவைப் பணிந்து தனக்குக் காட்டிய சிற்றறையில் படுத்துக் கொண் டான். ஆனால் அவனுக்கு உறக்கம் கொள்ளவில்லை. அன்றைய நிகழ்ச்சிகளையெல்லாம் நினைத்துக் கொண்டே புறக் கண்களை மூடியதால் மனக்கண் நன்றாகத் திறந்தது. அதில் தோன்றினாள் சந்திரமதி. அவள் அவனை நோக்கிப் புன்முறுவல் கொண்டாள். அவன் மனத்தின் மீது தனது பூங்கால்களால் நடந்தாள். பிறகு மனத்தோடு மனமாகப் படுத்து விட்டாள். அவள் பூவுடல் தன் மனத்தில் பூராவாகத் தோன்றியது சத்ருஞ்சயனுக்கு. அந்த நினைப்பு தகாத நினைப்பு என்று எண்ணிய சத்ருஞ்சயன் புறக் கண்களைத் திறந்து எழுந்தும் உட்கார்ந்து கொண் டான்.

“சத்ருஞ்சயா! என்ன காரியம் செய்தாய்? உன் மன்னனுக்குப் பெண் எடுக்கச் சென்ற நீ அந்தப் பெண்ணை நினைப்பதும் மகிழ்வதும் சரியா? அவள் ராஜபுதனத்து வாரிசு அல்லவா?” என்று அவன் மனம் கேட்டது.

அடுத்து அவன் தந்தை அவன் மனக்கண்ணி
தோன்றி, "உன்னை நான் அனுப்பியது எதற்காக?
செய்ய முயல்வது என்ன?" என்று சீறினார்! 'இல்ல
இல்லை. அவளைத் தேடிக் கொண்டிருக்கிறேன்
என்று மனத்திலேயே கூறினான் சத்ருஞ்சயன்.

அப்பொழுது சந்திரமதி பக்கத்தில் இருப்பதாக
தோன்றியது சத்ருஞ்சயனுக்கு. அதுவும் கனவென்
நினைத்தான். ஆனால் கனவல்ல அது. பக்கத்து அ
யிலிருந்த சந்திரமதி உண்மையாகவே வெளியிட்
நகைப்பு அவன் காதுகளில் ஜலதரங்கம்போல் மி
இன்பமாக ஒலித்தது.

# 5
# புது உத்தியோகம்

மல்லிநாதரிடம் சீடப்பிள்ளையாகச் சேர்ந்த அந்த முதல் இரவில் பக்கத்து அறையில் சந்திரமதி ஜலதரங்கம் இசைப்பது போல் வெளியிட்ட சிரிப்பொலி சத்ருஞ்சயனின் உணர்ச்சிகளை யெல்லாம் தொட்டதால் பற்பல எண்ணங்களில் அவன் ஈடுபட்டான். அவள் மாலையிலிருந்து தன்னிடம் நடந்து கொண்ட முறையிலிருந்து உலகம் வர்ணித்ததுபோல், அவள் தந்தை மல்லிநாதர் நினைத்தது போல், சந்திரமதி அத்தனை ராட்சஸியாயிருக்க முடியாதென்று திட்டமாகத் தனக்குள் சொல்லிக் கொண்டான்.

காட்டுப் பகுதியில் தான் கைதட்ட முயன்ற சமயத்தில் தன்னைத் தடுத்த மல்லிநாதர், "அவளை மணப்பது மரணத்தை மணப்பதற்குச் சமானம்" என்று கூறியது தன்னை அச்சமுறுத்துவதற்கே இருக்க வேண்டுமென்று அவன் நம்பினான். அவன் தன் தலைக்கு நீரூற்றியபோது அவள் முழங்காலுக்கு மேற் பகுதிகளை எத்தனை லாவகமாகத் தனது சீலையால்

மறைத்துக் கொண்டாள்? எத்தனை லாவகமாக தனது சீலையைச் சுருட்டி இரண்டு கால்களுக்கு நடுவில் இடுக்கிக் கொண்டாள் என்பதை எண்ணி பார்த்த சத்ருஞ்சயன் பண்பெல்லாம் உருவான ஒ பெண்ணைத் தான் சந்தித்ததை உணர்ந்து கொண் டான்.

பிறகு தனக்கு அவள் ஆடை கொணர்ந்த பூஜைக்கு உதவியது அனைத்தையும் ஒவ்வொன்றா நிகழ்ச்சிகளை மனத்தில் ஓடவிட்ட சத்ருஞ்சய தான் அவளிடம் மனத்தைப் பறிகொடுத்துவிட்டதை புரிந்து கொண்டான். அது ராஜத் துரோகமென்பது அவனுக்குத் தெரிந்தே இருந்தது. மன்னனுக்கு தூக்கிச் செல்ல வேண்டிய பெண்ணை அடைய முயல்வது தவறு என்பதை உணர்ந்த அவன் 'சி தவறுகளிலிருந்து மனிதர்கள் தப்ப முடிவதில்லை என்றும் உள்ளூரப் பேசிக் கொண்டான். இருப்பினு தந்தையின் ஆணையை முன்னிட்டு, "நாளை முத அவளை நான் சந்திப்பதில்லை" என்று உள்ளூ பிரமாணமும் செய்து கொண்டான்.

ஆனால் அந்த முதல் இரவிலேயே அவன் பி மாணத்தை அவனது புத்தி சுக்கு நூறாக உடைத்து கொண்டிருந்தது. திரும்பத் திரும்ப அவளையு முக்காட்டிற்குள்ளும் தெரிந்த அவள் கருவண்டு வி களையும் விற்களைப் போன்ற புருவங்களையும் எண் ணிக் கொண்டே இருந்தான். கடைசியில் ஒரு முடிவு கும் வந்தான். எப்படியும் மறுநாள் காலையில் மல் நாதரிடம் உண்மையைக் கூறிவிட்டுத் திரும்ப உத

புரிக்கு ஓடிவிடுவதென்ற தீர்மானத்துக்கும் வந்தானா னாலும் விதி வேறு விதமாக விளையாடிவிட்டது.

காலையிலே எழுந்திருந்த அவன் தனக்கு முன்பே சந்திரமதியும் குருநாதரும் எழுந்து விட்டதையும், பூஜைக்கு சகலமும் தயாராயிருந்ததையும், போர் வித்தை பயில ஐந்தாறு மாணவர்களும், கூடத்தில் நின்றிருந்ததையும் கவனித்து வெட்கத்துடன் தோட் டத்துக்கு ஓடித் துரிதமாக நீராடித் தனது உலர்ந்த ஆடைகளை அணிந்து நெற்றியில் திலகம் தீட்டி வேகமாகக் கூடத்துக்கு வந்தான் பூஜையில் பங்கு கொள்ள.

அன்று காலை மல்லிநாதரே பூஜை நடத்தினார். பிரசாதங்களை அவரே கொடுத்தார். வித்தியாப்பியா சத்தை ஆரம்பிக்கும் முன்பு சத்ருஞ்சயனை நோக்கி, "மகனே!" என்றழைத்தார்.

"குருநாதரே! கட்டளையிடுங்கள்," என்றான் சத்ருஞ்சயன்.

"கொல்லைப் புறத்திலிருக்கும் காளையை அவிழ்த் துக் கொள். அங்குள்ள பெரும் அலகை எடுத்துக் கொள். சந்திரமதியுடன் ஆடு மேய்க்கத் துணையாகப் போய் வா" என்று கூறிவிட்டு அவனைத் திரும்பிப் பார்க்காமல் மற்றொரு சீடனுக்கு வாள் பயிற்சியை ஆரம்பித்தார்.

குருநாதர் தனக்கு வித்தை ஏதும் கற்பிக்காமல் ஆடு மேய்க்க அனுப்புவதைப் பற்றி ஒரு விநாடி சினந் தான்; ஒரு விநாடி வியந்தான். ஆனால் சந்திரமதிக்குத்

துணையாகப் போவது வாள் பயிற்சியைவிடச் சிறந்தது என்ற எண்ணத்தால் குருவுக்குத் தலை வணங்கிச் சென்றான் கொல்லைப் புறம். அங்கிருந்த காளையை அவிழ்த்ததும் சந்திரமதி அங்கு தோன்றி, “அலகுக் கொம்பை எடுத்துக்கொண்டு தெருக் கோடிக்கு வாருங்கள்,” என்று உத்தரவிட்டாள்.

“அங்கு எதற்கு?” என்று சத்ருஞ்சயன் கேட்டான்.

“ஆட்டுக்கிடையை அங்குள்ள திடலில் தங்க வைத்திருக்கிறேன்,” என்று கூறிவிட்டு வாசல் புறமாக நடந்தாள் சந்திரமதி. அலகுக் கோலை எடுத்துக் கொண்டு சத்ருஞ்சயனும் அவளைப் பின்பற்றி நடந் தான். தெருக் கோடியிலிருந்த ஆடுகளிடம் சென்று சந்திரமதி குரல் கொடுத்ததும் ஆடுகள் தலைகளைத் தூக்கி ஆவலுடன் பார்த்தன. அவள் தன் மடி யிலிருந்து குழலை எடுத்துச் சின்னஞ் சிறு கீதத்தை வாசித்ததும் ஆடுகள் கும்பலாகவும், நான்கு நான்காக ஒரே சீராகவும் கோட்டை வாயிலை நோக்கி நடந்தன.

சந்திரமதி அடுத்து முதல் நாள் போல் காளையில் ஏறிக் கொண்டாள். “நீங்கள் பின்னால், வாருங்கள் கோலுடன்” என்று கூறிவிட்டு, காளை வயிற்றை அவளது அழகிய கால்களால் தட்ட காளையும் ஒய் யார நடை போட்டது.

கோட்டை வாயிலுக்கு வந்ததும் காளையிலிருந்து திரும்பி சத்ருஞ்சயனைப் பார்த்த சந்திரமதி, “டேய்! கோலைப் பிடித்துக் கொண்டு தீவட்டி பிடிப்பவன்

போல் நிற்காதே. முன்னால் நட. ஆடுகளைச் சரியாக வளைத்து ஓட்டு," என்று உத்தரவிட்டாள்.

சத்ருஞ்சயன் அவள் மரியாதையற்ற வார்த்தைகளுக்கு, வார்த்தைகளில் பிறந்த கட்டளைக்கு, படியலாமா, வேண்டாமா என்று ஒரு விநாடி சிந்தித்தான். அடுத்து "கட்டளை அம்மணி" என்று சொல்லிக் கொண்டு ஆடுகளுக்கு முன்னால் ஓடி, "ஏய்! ஏய்!" என்று ஆடுகளை விரட்டினான்.

அன்று காலையும் முதல் நாள் காவலரே காவல் செய்தமையால் சத்ருஞ்சயனைக் கண்டு புன் முறுவல் பூத்தனர். "இவன் வேலையாள்தான், மல்லிநாதர் சொன்னது பொய்யல்ல," என்றான் ஒரு காவலன்.

"தெரியாமலா நமது தலைவர் நம்மைக் கடிந்து கொண்டார்?" என்றான் இன்னொரு காவலன்.

அடுத்து கோட்டை வாயில் கதவு திறக்கப்பட்டு ஆட்டு மந்தை பாய்ந்து வெளியில் சென்றது. சத்ருஞ்சயன் அவற்றுக்கு முன்னால் ஓடினான். ஆடுகள் வழக்கமாக மேயும் இடத்தை நாடிச் சென்றன. பின்னால் சந்திரமதி காளைமீது கம்பீரமாக உட்கார்ந்து குழலை ஊதிக்கொண்டு வந்தாள்.

அடுத்த ஒரு நாழிகைக்குள் ஒண்டாலா கோட்டை தூரத்தில் தெரிந்தது. முதல்நாள் தான்வந்த பாதையையும் பார்த்தான் சத்ருஞ்சயன். அதைத் தாண்டி சிறிது தூரத்தில் பெரும் புல்வெளியிருந்தது. அதில்

ஆடுகள் நின்று மேயத் தொடங்கின. சந்திரமதியும் காளையிலிருந்து இறங்கிப் புல்வெளியை அடுத்திருந்த தோப்புக்குள் நுழைந்தாள். சத்ருஞ்சயனையும் வரு மாறு சைகை செய்துவிட்டு சற்று வேகமாகவே நடந்து தோப்பின் நடுவிலிருந்த ஒரு மரத்தடியில் சாய்ந்து நின்று தலையைக் குனிந்த வண்ணம், "நீங்கள் மன்னிக்க வேண்டும்," என்று கூறினாள் சத்ருஞ் சயனை நோக்கி.

சத்ருஞ்சயன் முகத்தில் வியப்பைக் காட்டினான். "எதற்கு மன்னிப்பு?" என்று கேட்கவும் செய்தான்.

"தங்களை மரியாதைக் குறைவாக 'டேய்' என்று வேலைக்காரனைப் போல சற்று முன்பு அழைத்தேன்," என்ற சொற்களைத் தடுமாற்றத்துடன் சொன்னாள்.

"ஆம்" என்றான் அவன் பதில் சொல்ல வேண்டு மென்பதற்காக.

"கோட்டை வாயில் காவலனை ஏமாற்றுவதற்காக அப்படி அழைக்க வேண்டியதாயிற்று," என்றாள் சந்திரமதி மீண்டும்.

"புரிந்து கொண்டேன்," என்றான் சத்ருஞ்சயன்.

"மன்னித்ததாகச் சொல்லவில்லையே?" என்று அவள் கேட்டாள்.

"காவலனை ஏமாற்ற அந்த வேஷம் போட்டீர்கள். அதற்கு மன்னிப்பு எதற்கு?" என்ற சத்ருஞ்சயன், "அம்

மணி! உங்களைப் பெயர் கொண்டு அழைக்கலாமா?' என்று வினவினான்.

அவள் ஒரு விநாடிகூட சிந்திக்கவில்லை. "அழையுங்களேன்" என்று கூறினாள்.

"சந்திரமதி!" என்று அழைத்தான் சத்ருஞ்சயன். அப்படி அழைப்பதிலேயே தனது மனம் உணர்ச்சியில் மூழ்குவதைக் கண்டான்.

"என்ன?" என்றாள் அவள் மெதுவாக.

"இந்த உலகம் ஒரு நாடக மேடை. நாம் எல்லாருமே வேஷம் போடுகிறவர்கள். நான் வேஷம் போடவில்லையா?" என்று வினவினான் அந்த வாலிபன்.

"என்ன வேஷம் போட்டீர்கள்?" என்று அவள் கேட்டாள்.

"ஆட்டுக்காரன் வேஷம்" என்று பொய்யைச் சொல்லிச் சமாளித்துக் கொண்ட சத்ருஞ்சயன் நகைத்தான். அவளும் நகைத்தாள் இன்பமாக.

பிறகு சொன்னாள், "வீரரே! இல்லை இல்லை சீடரே! நான் ஆடுகளுக்கு இந்த மரத்திலேறிப் பெரிய கிளை உடைக்கிறேன். நீங்கள் அலகால் தழைகளை மாத்திரம் சிறு கிளைகளாக முறியுங்கள்" என்று கூறி விட்டு அடுத்து என்ன செய்யப்போகிறாள் என்பதை சத்ருஞ்சயன் ஊகிக்கு முன்பாக தான் தங்கியிருந்த மரத்தில் தாவி மேற்கிளையில் ஏறிவிட்டாள்.

கிளைகள்மீது சர்வ லகுவாகத் தாண்டிச் சென்ற சந்திரமதியைக் கீழிருந்தே வியப்புடன் பார்த்தான் சத்ருஞ்சயன். ஆடையை வரிந்து தார்ப்பாச்சாகக் கட்டி கிளைகளில் தாவித் தாவிக் கிளைகளை உடைத்துப் போட்டவிதத்தையும், அவள் கால்களின் அழகையும் கவனித்துக் கொண்டே வாயைப் பிளந்து கொண்டிருந்த சத்ருஞ்சயன் திடீரென்று கூவினான், "சந்திரமதி! பின்னால் வந்துவிடு," என்று.

அடுத்து கையிலிருந்த அலகுக் கத்தியால் அந்த மரக்கிளையிலிருந்த கண்குத்தி பாம்பு ஒன்றையும் குத்தி எடுத்தான். அவள் தப்பினாள் அந்த ஆபத்திலிருந்து. ஆனால் இன்னோர் ஆபத்து அடுத்த விநாடி உதயமாயிற்று. அவன் கூவலால் அவள் ஒரு பட்டுப் போன கிளைமீது காலை வைத்திடவே கிளை சரேலென முறிந்தது. தலை கீழாகப் பூமியில் விழ இருந்தவளைக் கோலை எறிந்துவிட்டுத் தனது இரு கைகளாலும் ஏந்திக் கொண்டான் சத்ருஞ்சயன். அப்படி அவன் தாங்கியதால் அவள் உணர்ச்சிகளும் குலைந்திருக்க வேண்டும். அவள் இரு கைகளும் அவன் கழுத்தை வளைத்தன.

# 6
# கள்வன்

அந்தப் பட்டுக் கைகள் கழுத்தைச் சுற்றியதால், அவள் தேகம் பூராவும் தனது கைகளில் துவண்டு கிடந்ததால், உணர்ச்சிகளை அறவே பறக்கவிட்ட சத்ருஞ்சயன் தனது வலிய உதடுகளை அவள் கழுத்தில் ஆழப் புதைத்தான். அவள் தொடைகளுக்குக் கீழிருந்த கையால் அவளை மேலும் தூக்கி அவள் மார்பைத் தனது மார்புடன் இழைத்துக் கொண்டான். பிறகு தனது தலையை அவள் கழுத்திலிருந்து எடுத்து முகத்தைக் கவனித்தான். அவள் கண்கள் மூடிக் கிடந்தன. முகத்திலும் சிறிது அதிர்ச்சி தெரிந்தது. அவள் மூர்ச்சையை எப்படியாவது தெளிவிக்க எண்ணி அவளைப் புல் தரையில் கிடத்தினான். மெல்ல அவள் கன்னங்களை வருடினான். சிறிதே கலைந்திருந்த கரிய குழல்களைக் கோதி விட்டான். பிறகு தயங்கினான். அடுத்து 'ஆபத்துக்குப் பாவ மில்லை' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு அவள் அணிந்திருந்த சட்டையின் பட்டுக் கயிறுகளை அவிழ்த்தான்.

லேசாக அவிழ்க்கப்பட்ட பட்டுக் கயிறுகள் நீங்கியதால், கச்சையின் முகப்பும் சற்றே இடைவெளி கொடுத்ததால் அவள் அழகிய மார்பின் மேல் விளிம்பும் அவன் கண்களுக்குத் தெரியவே அந்த வெண்மையைப் பிரமையுடன் பார்த்தான்.

'இத்தகைய அழகுடையவளை, இந்தக் குழந்தை முகத்தாளை ராஜபுதனம் ஏன் ராட்சஸி என்று அழைக்கிறது?' என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டான்.

மார்பின் அந்த எழுச்சியின் முகப்பாலேயே அவளிடம் சித்தத்தைப் பறிகொடுத்த சத்ருஞ்சயன் அவள் வரிந்து கட்டியிருந்ததால் கால்களுக்கிடையே மறைந்த சீலை புலனாக்கிய இந்திர ஜாலத்தைப் பற்றி ஊகித்தான்.

"ஒரு மனிதனைப் பைத்தியமாக அடிக்க ஆடையின் இந்த நிலையே போதும்" என்று முணுமுணுத்தவ்ன் அவள் வழவழப்பான தொடையின் சிறு பகுதியையும், அழகிய ஆடு சதையையும் பார்த்து "ராணாவுக்குப் புத்தியிருந்தால் சலவைக்கல்தான் வழவழப்பு என்று நினைத்து அதைக் கொண்டு மாளிகை கட்டுவாரா?" என்று எண்ணிக் கொண்டே அவள் கால்கள் மீது கையை வைத்தான்.

கால்கள் சில்லென்றிருந்தன. "ஐயோ! என்ன இப்படி இருக்கின்றதே?" என்று பதறி அவள் மார்பில் துடிப்பு இருக்கிறதா என்று பார்த்தான். அதன் துடிப்பு ஒரே சீராக இருந்ததாலும் கழுத்திலும் உஷ்ணமிருந்த

தாலும் அதிக ஆபத்து ஏதுமில்லையென்று புரிந்து கொண்டு அவள் பக்கத்திலிருந்து எழுந்திருக்க முயன்றான்.

அந்தச் சமயத்தில் அவள் 'உம்' என்று பெரிதாக முனகினாள். சற்றுத் திரும்பி அவன்மீது தனது கை யொன்றையும் போட்டாள். பிறகு மெள்ளக் கண் விழித்து, "நான் எங்கே இருக்கிறேன்?" என்று கேட் டாள்.

"இங்குதான் இருக்கிறாய் சந்திரமதி!" என்று கூறிய சத்ருஞ்சயன் நன்றாகத் தரையில் உட்கார்ந்து அவளை எடுத்து மடியில் கிடத்திக் கொண்டான். அவள் அதை எதிர்க்கவில்லை. அவன் மடியில் துவண்ட புஷ்பக் கொடிபோல் கிடந்தாள். அவள் குவளை விழிகள் அவளை நன்றாகவே பார்த்தன.

'இது சரிதானா? முறையா?' என்று கேட்பது போல் சத்ருஞ்சயனுக்குத் தோன்றவே, "சந்திரமதி! பேசாமல் சிறிது நேரம் படுத்திரு. மூர்ச்சை தெளிந்து விடும்." என்றான்.

அவள் மென்மைப் புன்முறுவல் பூத்தாள். "நான் இப்படிப் படுத்திருந்தால் பார்ப்பவர்கள் என்ன சொல்வார்கள்?" என்று மெதுவாகக் கேட்டாள்.

"ஏதோ ஆபத்து என்று நினைப்பார்கள். வேறெது வும் நினைக்க மாட்டார்கள்," என்றான் சத்ருஞ்சயன்.

"இப்படி நான் வேறொருவர் மடியில் கிடந்தால் நீங்களும் அப்படித்தான் நினைப்பீர்களா?" என்று சந்திரமதி கேட்டாள், நகைத்தாள் ஒருமுறை.

அதே ஜலதரங்க நகைப்பு! முந்தைய இரவில் கேட்ட அதே இனிய ஒலி! அதைக் கேட்டு சத்ருஞ் சயனுக்குக் கோபமே வந்தது. "என்ன சொன்னாய் சந்திரமதி? இன்னொருவன் மடியில் கிடப்பாயா? கிடந்தால் அவனையும் கொன்று உன்னையும் கொன்று போடுகிறேன்" என்று சீறிய சத்ருஞ்சயன் கோபத்தின் முதிர்ச்சியால் அவள் உடலைத் தூக்கி இறுக்கினான். சரேலெனக் குனிந்து தனது இதழ் களால் அவள் இதழ்களை அழுத்தினான். சினம் மிஞ்சியதால் பற்களால் கீழ் இதழைப் பற்றவும் செய்தான்.

சந்திரமதி மீண்டும் கண்களை மூடிக் கொண் டாள். அவள் பற்களும் அவன் இதழ்களை மெல்லக் கவ்வின. அவன் தனது உடலை இறுக்கியது எத்தனை இன்ப உணர்ச்சிகளைத் தூண்டுகிறது என்பதை உணர்ந்ததால் பெருமூச்சொன்றையும் வெளியிட்டாள்.

அவன் இடது கை மட்டும் அவளை ஏந்தி நிற்க அவன் வலது கை அவள் அழகிய உடலின் ஆராய்ச்சி யில் இறங்கியது. அவள் வாய் திறந்து பேசினாள். தன் கன்னத்தை அவன் கன்னத்துடன் இழைத்து, அவன் காதுக்கருகில், "சத்ருஞ்சயா! உன் சாயம் வெளுத்துவிட்டது. உன் வேஷமும் கலைந்து விட்டது. உண்மையில் நீ கள்வன்" என்று காதில் சொன்னாள்.

அவளை ஆராய்ந்த கை திடீரென நின்றது. அவன் அவள் காதில் கேட்டான், "என்ன! நான் கள்வனா!" என்று.

"ஆம்" அவள் மெதுவாகப் பேசினாள்.

"யார் சொன்னது?" என்று அவன் சீற முயன்றான்; முடியவில்லை. சொற்கள் இன்பமாகவே உதிர்ந்தன.

"தந்தை." அவள் கைகள் அவன் கழுத்தை இறுக்கின.

"உன் தந்தையா?" அவன் கள்ள விழி விழித்தான்.

"ஆம், நீங்கள் என்னைத் தூக்கிச் செல்ல வந்தது அவருக்குத் தெரியும்," என்ற சந்திரமதி அவன் கண்களுடன் தனது கண்களைக் கலந்தாள்.

விழிகள் கலந்தன. உணர்ச்சிகள் புரண்டன. உடல்கள் இழைந்தன. அந்த இழைப்பைப் பார்க்க நாலைந்து ஆட்டுக் குட்டிகள் ஓடி வந்தன. அவன் கையில் வளைந்தபடி சந்திரமதி சொன்னாள், "இந்த ஆடுகளில் ஓரிரண்டைச் சில சமயங்களில் ஓநாய் தூக்கிச் செல்வதுண்டு. ஒரு ராஜபுத்ரன் ஓநாயாகக் கூடாது. திருட்டுத்தனம் சிலவற்றில் இருக்கலாம். எல்லாவற்றிலும் இருக்கக் கூடாது" என்று.

மெள்ள மெள்ள உணர்ச்சிகளைத் திரும்பப் பெற்ற சத்ருஞ்சயன் அவளைக் கீழே விட்டு அவளெதிரில் தலை வணங்கி நின்றான். "சந்திரமதி!" என்று மூர்க்கத்தனமாக அழைத்தான்.

அந்த மூர்க்கத்தனம் காதலின் மேல்பூச்சு என்பதை சந்திரமதி புரிந்து கொண்டதால், "கட்டளையிடுங்கள் பிரபு!" என்றாள்.

அதிர்ச்சியடைந்த சத்ருஞ்சயன,"என்ன, பிரபுவா! இந்த அடிமையா!" என்று வினவினான், அதிர்ச்சி குரலிலும் ஊடுருவ.

"ஆம்" என்றாள் அவள்.

"எப்பொழுது முதற் கொண்டு?" என்று அவன் வினவினான்.

"நேற்று இரவு முதல்."

"என்ன நேற்று இரவு முதல்?"

அவள் சொன்ன பதில் அவனைப் பிரமிக்க வைத்ததா? குழம்பச் செய்ததா? அவனுக்கே புரிய வில்லை.

# 7
# அவள் கதை

ராஜபுதனத்து ராட்சஸியெனப் பெயர் வாங்கிய சந்திரமதி தன்னை பிரபு என்று அழைத்ததும், கட்டளையிடுங்கள் என்று கூறியதும், அத்தனை தூரம் சரசத்துக்கு இடம் கொடுத்ததும், முந்திய இரவு நிலைமை மாறிவிட்டதென்றும், சொன்ன சொற்களின் முழு அர்த்தம் விளங்காததால், “விளங்கச் சொல் சந்திரமதி” என்று கேட்டான், தலை வணங்கி அவள் எதிரில் நின்றபடி.

அதுவரை அவன் தன்னைக் கட்டித் தழுவியதால் லேசாகச் சீர்குலைந்திருந்த தனது ஆடையைச் சரிப்படுத்திக் கொண்டு எழுந்து இரு முழங்கால்களையும் கட்டிய வண்ணம் உட்கார்ந்த சந்திரமதி, “இதில் விளக்குவதற்கு அதிகம் ஏதுமில்லை. நீங்களே ஊகித்துக் கொள்ளலாமே” என்று சொல்லித் தலை கவிழ்ந்தாள். அன்னை பூமியை நோக்கினாள்.

“பூமியை ஏன் பார்க்கிறாய்? தலை நிமிர்ந்து பேசு” என்று சாதாரணமாகக் கூறினான் சத்ருஞ்சயன்.

"தாயில்லாத அபலைக்குப் பூமிதான் அன்னை. சங்கடம் வரும்போது அன்னையை நோக்குவது பெண்களின் இயல்பு" என்றாள் சந்திரமதி.

சத்ருஞ்சயன் தாயில்லாத அந்தப் பெண்ணை அனுதாபத்துடன் நோக்கினான், சில விநாடிகள். பிறகு கேட்டான், "ஏன் பாசாங்கு செய்கிறாய், பயந்தவள் போல்? உன்னை ராட்சஸி என்று ராஜபுதனம் பூரா வும் சொல்கிறதே?" என்று அனுதாபத்தை உதறி மூர்க்கத்தனமாகக் கேட்டான்.

"மாற்றானுக்கு, என் பெண்மையைக் கவரலாம் என்று துணியும் கயவர்களுக்கு, நான் ராட்சஸி. என் கணவருக்கு நான் அடிமை" என்றாள் சந்திரமதி.

சத்ருஞ்சயன் உள்ளத்தில் சிறிது சாந்தி நிலவியது, மாற்றாருக்கு ராட்ஸசியென்று அவள் தன்னைச் சொல்லிக் கொண்டதில். இருப்பினும் கேட்டான், "அப்படியானால் உன் கணவர் யார்?" என்று.

சந்திரமதி தலை குனிந்த வண்ணம் சொன்னாள், "இந்தக் கேள்வியைக் கேட்பவர், இத்தனை நேரம் என்னைத் தொட்டவர்..." என்று. இந்தப் பதில் சத்ருஞ்சயனைத் தூக்கிப் போடவே, "யார், நானா?" என்று அதிர்ச்சியுடன் கேட்டான்.

"அதில் இன்னும் சந்தேகமிருக்கிறதா?" என்று சந்திரமதி கேட்டாள். "இத்தனை நேரம் நீங்கள் தொட்டுக் குலாவியதற்கு இடங்கொடுத்த என்னை வேசியென்று நினைக்கிறீர்களா?" என்று கேள்வியில் மூர்க்கத்தனத்தைக் காட்டினாள் சந்திரமதி.

"சந்திரமதி!" துவங்கிய பேச்சை முடிக்க முடிய வில்லை சத்ருஞ்சயனால்.

சந்திரமதி மெல்லத் தனது தலையை உயர்த்தி அவனை வெறுப்புடன் நோக்கினாள். "நீங்கள் ராஜ புத்திரர்தானே?" என்று வெறுப்புக் குரலிலும் துலங்கக் கேட்டாள்.

"இந்தச் சந்தேகம் ஏன் வந்தது உனக்கு?" என்று சத்ருஞ்சயன் வினவினான், சீறிய அவள் கண்களும், குரலில் தெரிந்த வெறுப்பும் அவனுக்கு அச்சத்தை விளைவித்ததால்.

சந்திரமதி உடனடியாகப் பதில் சொல்லவில்லை. சொன்னபோது அவள் குரலில் உறுதி நிரம்பிக் கிடந் தது. "சலூம்ப்ரா வம்சத்தவரே! நேற்றிரவு நிகழ்ச்சி களைச் சிந்தித்துப் பாருங்கள், சிந்திக்கும் சக்தியிருந் தால், ராஜபுத்திரர்கள் இல்லங்களில் புருஷன் பூஜை செய்யும்போது யார் பூஜா திரவியங்களை எடுத்துக் கொடுப்பார்கள்..."

"மனைவி."

"உத்திரணியிலிருந்து நீரை எடுத்து ஊற்றும் உரிமை யாருக்கு?"

"மனைவிக்கு..."

"புஷ்பார்ச்சனைக்குத் தட்டில் உதிரிப் புஷ்பங் களை வைத்துக் கொண்டு நிற்கக் கூடியவள் யார்?"

"மனைவி" என்ற சத்ருஞ்சயன் பேச முடியாமல் தவித்தான். இத்தனையும் முந்திய நாள் இரவில் அவள்

இல்லத்தில் நடந்திருக்கும் நிகழ்ச்சிகள். இது எப்படி தன்புத்தியில் ஏறாமல் போய்விட்டது என்று நினைத்து வியப்பெய்தினான்.

அவன் அப்படிக் குழம்பி நின்ற நிலையில் அவள் கணீரெனக் குரலை எழுப்பி, "ராஜபுத்திரரே! ஊரில் போகிறவர் வருகிறவர்களுக்கெல்லாம் தலையில் நீர் ஊற்ற நான் என்ன அடிமைப்பெண்ணா? அடிமைப் பெண்கள்கூட ராஜபுதனத்தில் கண்ட புருஷர்களை நீராட்ட வரமாட்டார்களே? உங்களை நீராட்டினேன். ஆடையெடுத்துக் கொடுத்தேன் உடுக்க. பூஜைக்கு உதவினேன். இத்தனையும் எதைக் குறிக்கிறது? நீங்கள் என்ன சுத்த அறிவிலியா?" என்று சீறினாள்.

சத்ருஞ்சயன் அவள் கைகளைப் பிடித்துத் தூக்கி, "நான் அறிவிலிதான் சந்திரமதி, அறிவிலிதான். உன் னைப் பார்த்ததும் என் அறிவெல்லாம் எங்கோ ஓடி விட்டது. எனக்குப் புத்தி உண்டு, உன் முன்னிலை யில் இயங்க மறுக்கிறது. கண்கள் இருக்கின்றன. பார்க்கமுடியவில்லை. என்னைக் கள்வனென்றாய். இல்லை நான் கள்வனில்லை, குருடன்!" என்று கூறி விட்டு, நின்ற அவள் முன்பு மண்டியிட்டான்.

அவன் தலையைத் தனது கால்களில் இணைத்துக் கொண்ட சந்திரமதி அவன் தலைக் குழலைக் கோதி விட்டாள். "மனைவி முன்பு மண்டியிடுவது அழகா?" என்று வினவினாள் குழைந்த குரலில்.

"மனைவி தெய்வ மங்கையானால் மண்டியிடுவது தவறல்ல. அடி சந்திரமதி! உன்னைத் தவறாக நினைத்ததற்காக என்னை மன்னித்துவிடு" என்று இணைந்த அவள் பருவத் தொடைகளில் தலையை உருட்டினான்.

அவன் தலையை அவள் தன் கால்களில் நன்றாக அழுத்திக்கொண்டு அவனைப் பெயர் சொல்லி அழைத்தாள். "சத்ருஞ்சயா! என்ன அழகான பெயர்! எத்தனை வீரமான பெயர்! நீ வருவாய் என்று எனது தந்தை முன்னமே ஊகித்து விட்டார். ராணாவுக்குப் பெண் கேட்டு இருவர் வந்து மானபங்கப்பட்டுச் சென்றதுமே சொன்னார் என்னிடம், 'சந்திரமதி! இத்துடன் இந்தப் பெண் கேட்கும் படலம் நின்று விட்டது. இன்னும் யாராவது ஒருவன் வருவான். அநேகமாக எந்த விஷயத்திலும் தோல்வியை ஏற்காத சந்தன் சலூம்ப்ரா வருவான். அவன் எனது தோழன். ஆனால் மேவார் நன்மைக்கு முன்பு எங்கள் தோழமையை மதிக்க மாட்டான். அல்லது வேறு யாரையாவது அனுப்புவான்' என்று சொன்னார். அப்பொழுது நாங்களிருவரும் எங்கள் பூஜா மண்டபத்தில் பேசிக் கொண்டிருந்தோம். திடீரென்று தந்தை வேதனையுடன் சொன்னார். 'குழந்தாய், சலூம்ப்ராவுக்கு ஒருமகன் இருக்கிறான். அவனுக்கு உன்னைக் கொடுப்பதாக நான் முடிவு செய்து நீண்ட நாளாகிறது. நானும் சந்தனும் பால்யத்தில் செய்த சபதம் அது. எங்களிருவரில் ஒருவருக்குப் பெண் குழந்தையும்,

இன்னொருவருக்கு ஆண் குழந்தையும் பிறந்தால் அவர்களிருவருக்கும் மணம் முடித்து விடுவது என்று உறுதி செய்து கொண்டோம். அவனுக்கு மகன் பிறந் தான். எனக்கு நீ பிறந்தாய். இருவருமே மனைவிகளை இழந்தோம், சிறுவயதில். பிறகு சலூம்ப்ரா போர்க்களம் சென்றுவிட்டான். அந்தக் குழந்தையை சதா புரவியில் வைத்துக்கொண்டு சந்தன் சுற்றுவதாகக் கேள்விப் பட்டேன். நீதான் அவன் மகனுக்கு மனைவியாக முடியும் என்றதால் பூரிப்படைந்தேன். இந்த ஒண் டாலா கோட்டையில் என்னிடம் போர்ப் பயிற்சி பெற, சாஸ்திர வித்தைகளை அறிய, பல ராஜபுத்ர வாலிபர்கள் வந்தார்கள். பலர் நல்ல வீரர்கள்; அழகர் கள். ஆனால் உன்னை வேறு யாருக்கும் கொடுக்க முடியவில்லை. எப்படியும் ஒருநாள் சத்ருஞ்சயன் உன்னைத் தேடி வருவான். அப்பொழுது அவனை ஏற்க நீ தயாராக இரு' என்று தந்தை சொன்னார். வேதனை நிறைந்த தந்தையின் சொற்களைக் கேட் டேன். உன்னைத் தவிர வேறு யாருக்கும் என்னைக் கொடுப்பதில்லை என்ற முடிவையும் செய்து கொண்டேன். அந்தப் பூஜைக் கூடத்திலேயே நினைத் துப் பார்த்தேன், எப்படியிருப்பாயோ என்று. எப்படி யும் விகாரமாயிருக்கக் கூடாது என்று ஹயக்ரீவ மூர்த்தியை, எங்கள் குலதெய்வத்தைப் பிரார்த்தித்தேன். சொல்லி வைத்தது போல் மறுநாளே நீ வந்தாய்..." என்ற சந்திரமதி தனது கதையைச் சிறிது நிறுத்தினாள். பிறகு சிரித்தாள். "உங்களை ஏகவசனத்தில் பேசுகிறது எத்தனை இன்பமாயிருக்கிறது?" என்றும் சொன்னாள்.

சத்ருஞ்சயன் உள்ளம் பெரும் மகிழ்ச்சியில் இருந்ததால், "மேலே சொல் சந்திரமதி" என்று ஊக்கினாள்.

அவள் மேலும் தொடர்ந்தாள். கதையில் இம்முறை மரியாதையைக் கையாண்டாள். 'உங்களைப் பார்த்ததுமே முக ஜாடையிலிருந்து தந்தை உங்களை அடையாளம் கண்டுபிடித்துக் கொண்டார். ஆகையால் உங்களை அழைத்து வந்தார் எங்கள் இல்லத்துக்கு. பிறகு நடந்தது உங்களுக்குத் தெரியும். முதலில் உங்களுக்குத் தலையில் நீர் வார்க்கச் சொன்னதற்கு நான் மறுத்தேன். பிறகு தன்னந் தனியாக ஒரு பரபுருஷனுக்கு உடை கொண்டுபோகச் சொன்ன போதும் மறுத்தேன். 'சொல்கிறபடி செய்' என்று தந்தை கடிந்து கொண்டதால் அதற்கும் உட்பட்டேன். பூஜைக்கு உதவி செய்யச் சொன்னபோது திட்டமாக மறுத்தேன். 'உங்களுக்கே இது அழகாக இருக்கிறதா?' என்று வினவினேன். 'உன் புருஷனுக்கு நீ செய்ய வேண்டிய கடமையைத்தான் செய்யச் சொல்கிறேன்' என்றார் தந்தை. புருஷனா! கேட்டதுமே திக்பிரமை கொண்டேன். நீங்கள் யாரென்பதைச் சொல்ல வாளின் பிடியைக் காட்டினார் தந்தை. அப்பொழுதும் மறுத்தேன். வாளை யாராவது திருடி வந்திருக்கலாமென்று சொன்னேன். தந்தை நகைத்தார்.

'சலூம்ப்ராவின் மகன் திருடனல்ல' என்றார். வேறு வழியில்லாமல் பூஜைக்கு உதவினேன். பூஜையில் நான் உங்கள் உருவத்தை முழுவதும் பார்த்தேன். உங்கள் அளவான தேகம் வீரத்தைப் புலனாக்கியது.

உங்கள் முகம் குழந்தை முகாமயிருந்தது. அது என் மனத்தை ஈர்த்தது. நான் தந்தையுடன் எதுவுமே பேச வில்லை. அன்று படுத்திருந்தபோது தனிமையில் நிகழ்ச்சிகளை நினைத்து நகைத்தேன், பைத்தியம் போல...” இந்த இடத்தில் சிறிது நிறுத்தினாள்.

“அந்த நகைப்பை நானும் கேட்டேன். சந்திரமதி! என்ன இன்பமாக நகைத்தாய்!” என்று கூறிய வண் ணம் எழுந்து அவளைத் தன்னை நோக்கி இழுத்தான் மெதுவாக.

“வேண்டாம். அந்திப் பொழுது வந்து விட்டது. விடுங்கள். புறப்படுவோம் வீட்டுக்கு” என்று அவள் சிறிது திமிறினாள்.

அவன் அந்தப் பொய்த் திமிறலை அடக்க முயன்று அவளை அப்படியே தூக்கிக்கொண்டு எதிரே முறிந்து விழுந்த கிளையை நோக்கி நடந்தான். “விடுங்கள் என்னை?” என்று சற்று இரைந்தே சொன்னாள்.

அப்பொழுது மூன்றாவது ஒரு குரலும் புகுந்தது இடையே “விடு அவளை” என்று.

அவளை விடாமலேயே திரும்பினான். சத்ருஞ் சயன். கோட்டைக் காவலர் தலைவன் உருவிய வாளுடன் எதிரே நின்றுகொண்டிருந்தான்.

# 8
# ராட்சஸி

சந்திரமதியை அணைத்த வண்ணம் திரும்பிய சத்ருஞ்சயன் கையில் வாளை உருவிநின்ற கோட்டைக் காவலர் தலைவனை மிக அலட்சியத்துடன் பார்த் தான். "யார் நீ?" என்றும் விசாரித்தான், அலட்சியம் குரலிலும் ஒலிக்க.

"உன்னை நேற்று மல்லிநாதருடன் அனுப்பியவன். நினைப்பில்லை உனக்கு? உன் வாள் விறகுக் கட்டை யில் *சொருகியிருந்தாலும் என் கண்களை மறைக்க முடியவில்லை. உன்னைத் தனது வேலையாள் என்று மல்லிநாதர் சொன்னதை நான் நம்பி விட்டேனென்று அவர் எண்ணியது விசித்திரம். அத்தனை சுலபமாக மல்லிநாதர் ஏமாறுபவர் அல்லர். ஏமாற்றும் குணமும் அவருக்குக் கிடையாது. நேற்று என்னவோ சுபாவத் துக்கு எதிராக நடந்து கொண்டார். அப்படி அவர் உன்னைக் காப்பாற்றியதற்கு நீ செய்யும் கைமாறு இதுதானா?" என்று வினவினான் கோட்டைக் காவலர் தலைவன்.

சத்ருஞ்சயன் கண்கள் அவன் மீது பதிந்தன. “கோட்டைக் காவலர் தலைவரே! அந்த மல்லிநாதர் என்னை ஆடுகளை மேய்க்க, அவரது மகளுக்கு உதவ நியமித்திருக்கிறார். ஆடுகள் தறிகெட்டு ஓடாமல் வளைக்கவே வந்தேன்” என்று விளக்கம் தந்தான், கண்களைக் கோட்டைக் காவலர் தலைவனிடமிருந்து எடுக்காமலே.

கோட்டைத் தலைவன் அந்த நிலைமையிலும் அமைதியைக் காட்டி, “நீ ஆடுகளை வளைப்பதாகத் தெரியவில்லையே. அவர் மகளை வளைத்திருப்பதாகத் தெரிகிறதே!” என்று சொல்லி சத்ருஞ்சயன் இடது கை சந்திரமதியின் இடையில் தவழ்ந்திருப்பதைத் தனது வாளாலும் சுட்டிக் காட்டினான்.

அதுவரை அவர்கள் உரையாடலில் ஈடுபடாமலிருந்த சந்திரமதி சத்ருஞ்சயனிடமிருந்து சற்று முன்னே நகர்ந்து நின்றாள். “ஜஸ்வந்த்சிங்! யாரைப் பார்த்து என்ன பேசுகிறாய் என்பதைப் புரிந்து கொண்டு பேசுகிறாயா?” என்று வினவினாள் மிகவும் நிதானமான குரலில்.

அப்படி அவள் நிதானங் காட்டிய சமயத்தில் அவள் பருவ உடல் கெட்டிப்பட்டு விட்டதையும், கால்கள் விரைத்து நின்றதையும், திடீரென அவள் நிமிர்ந்ததையும், தலையை ஒரு முறை ஆட்டிக் குழலைப் பின்னுக்குத் தள்ளியதையும் சத்ருஞ்சயன் கண்டாலும், காவலர் தலைவனை நோக்கிய முகத்தைக் காண முடியவில்லையாகையால் அவள் விழிகள் சீறியதை, முகம் பயங்கரமாகச் சிவந்ததை அவனால் பார்க்க முடியவில்லை.

ஆனால் அவள் கமல முகம், அன்பு சொட்டிய முகம் திடீரென ராட்சஸ முகமாக மாறிவிட்டதை ஜஸ்வந்த் கண்டான். அந்த நிலையில் அவள் எதற்கும் துணிந்தவள் என்பதையும் புரிந்து கொண்டான். ஆகவே சற்றுப் பின்னடைந்து வாளையும் சிறிது தாழ்த்தி, "சந்திரமதி! உன்னைக் காப்பாற்றவே நான் வந்தேன். திருட்டுத்தனமாக ஊருக்குள் புகுந்த இவனிடம் எனக்கு நம்பிக்கையில்லை," என்று கூறினான்.

"என்னைக் காக்க இன்னொருவன் தேவையா?" என்று வினவிய சந்திரமதியின் குரல் அடியோடு மாறியிருந்தது.

காவலர் தலைவன் பணிவுடனேயே பதில் சொன்னான். "இல்லை மல்லிநாதர் மகளே! இங்கு அடிக்கடி சித்தூர் ராணாவின் ஒற்றர்கள் வருகிறார்கள். உன்னைத் தூக்கிச் செல்லவே அவர்கள் வருவதாகவும் கேள்வி. இந்தக் கோட்டையின் காவலர் தலைவன் என்ற முறையில் உன்னைக் காப்பது என் கடமை" என்று.

சந்திரமதி ஒரு விநாடி பதில் சொல்லவில்லை. "பிறகு, ஜஸ்வந்த்! நீ போகலாம்" என்று ராணியைப் போல், உத்தரவிட்டாள்.

அந்தக் கட்டளைக்கு அவன் மசிந்ததாகத் தெரியவில்லை. "சந்திரமதி! கோட்டைக் காவலர் தலைவன் என்பதால் சில பொறுப்புகள் எனக்கு உண்டு" என்றான்.

"பெண்களைக் கண்காணிப்பது அவற்றில் ஒன்றா?" இம்முறை அவள் குரலில் சூடு துளிர்த்தது.

"கண்காணிப்பதல்ல, பாதுகாப்பது," என்ற ஜஸ் வந்த், "பெண்ணே, விலகி நில். நான் அந்தக் கய வனை அழைத்துச் செல்கிறேன்" என்று வாளை மீண்டும் நீட்டிக்கொண்டு ஓர் அடி முன் எடுத்து வைத்தான்.

அதுதான் அவன் செய்த தவறு. அவனுக்கு வழி விடுவதுபோல் நகர்ந்த சந்திரமதி காலில் சிக்கிய சேலையைச் சரி செய்வதுபோல் குனிந்தாள். அடுத்து அவள் சரேலென எழுந்தபோது ஏற்கெனவே முறிந்து விழுந்த மரக்கிளை அவள் கையிலிருந்தது. அடுத்த விநாடி அந்த மெல்லிய கை மிகுந்த உரமுடன் எழுந்து மின்னல் வேகத்தில் காவலர் தலைவன் தலையில் மரக் கிளையை இறக்கிவிட்டது. இது இறங்கிய வேகத்தில் தன்னைத் தடுத்துக்கொள்ள அவன் நீட்டிய வாள் நிலத்தில் ஆடிப் புதைந்தது. காவலர் தலைவன் தலைமீது இறங்கிய கிளையின் வேகத்தின் விளை வாகச் சிறிது சத்தங்கூடப் போடாமல் மண்ணில் சாய்ந்தான். அவன் தலையில் கிளை தாக்கிய இடத்தில் குருதி பாய்ந்து கொண்டிருந்தது.

முற்றும் எதிர்பாராத விதமாக நேர்ந்த அந்த நிகழ்ச்சியைக் கண்ட சத்ருஞ்சயனும் பிரமை பிடித்து நின்றான். அந்த மெல்லிய கைக்கு, சற்று முன்பு தனது கழுத்தை வளைத்த பட்டுக் கைக்கு, இத்தனை பலம் எங்கிருந்து வந்தது என்று வியப்பின் எல்லையை

அடைந்து நின்றான் அவன். அந்த ஊக்கத்துடன் சந்திரமதி திரும்பியபோது அவள் கண்களில் இருந்த பயங்கரம், சமுகத்தில் காணப்பட்ட கொடூரம் இரண்டும் சத்ருஞ்சயனுக்கே அதிக அச்சத்தை அளித்தன.

அடுத்து அவள் நடந்துகொண்ட முறை மேலும் அவன் அச்சத்தை உச்ச நிலைக்குக் கொண்டு போயிற்று. அவள் எதிரே கிடந்த ஜஸ்வந்த்சிங்கின் உடலை நோக்கிச் சென்று காலால் அவனை உதைத்துப் பார்த்தாள். பிறகு காயத்தைக் கூர்ந்து கவனித்தாள். பிறகு கையிலிருந்த பெரும் மரக் கிளையால் அவன் உடலைப் புரட்ட முயன்றாள். அவள் அடித்த வேகத்தில் கிளை முறிந்து விட்டதால் காவலர் தலைவனின் பெரிய தேகத்தை அதைக் கொண்டு புரட்ட முடியாததன் விளைவாக சத்ருஞ் சயனை நோக்கி, “இப்படி வாருங்கள். அவனைச் சற்றுப் புரட்டி அவன் உடலின் கீழ் மண்ணில் பாய்ந் திருக்கும் வாளை எடுங்கள்” என்று உத்தரவிட்டாள்.

சத்ருஞ்சயன் ஏதும் பேசவில்லை. சற்று முன்பு கோபத்தால் சிவந்தும் கருத்தும்விட்ட அவள் வதன மும் சிறிய கண்களும் அவளை ராட்சஸியாக அடித் திருந்ததை அவன் கவனித்திருந்தானாகையால் ஏதும் பேசாமல் அவள் இட்ட பணிகளை நிறைவேற்ற முனையலானான். மெள்ள காவலர் தலைவனை லேசாகப் புரட்டிச் சற்று தூரம் இழுத்துச் சென்று தலைக்காயத்தில் மண் படாதிருக்கக் குப்புறவே படுக்க வைத்தான். பிறகு ஆழமாக மண்ணில் பாய்ந்திருந்த

வாளைப் பிடுங்கினான். அடுத்து என்ன செய்ய வேண்டும் என்று கேட்கும் பாவனையில் சந்திர மதியை நோக்கினான்.

"என்னைப் பார்ப்பானேன்? அவன் தலைக் காயத்தைக் கவனியுங்கள். குருதியை நீர் கொண்டு கழுவிக் கட்டுப் போடுங்கள், குருதியை நிறுத்த," என்று கூறினாள் சந்திரமதி.

சத்ருஞ்சயன் ஏதும் பேசாமல் இல்லத்திலிருந்து இருவரும் குடிப்பதற்காக அவள் கொணர்ந்திருந்த ராஜ புதனத்தின் தனிப் பொருளான நீண்ட கூஜாவி லிருந்து நீர் எடுத்துத் தலைவனின் தலைக் காயத்தைக் கழுவினான். "காயம் ஆழமாயிருக்கிறது. குருதி நிற்க வில்லை" என்றான் சந்திரமதியை நோக்கி.

"அவன் உடையிலிருந்து அவன் வாளாலேயே சிறிது துணி கிழித்துக் கொள்ளுங்கள். அதைக் கொண்டு கட்டுப் போடுங்கள்," என்றாள் அவள் சர்வ சாதாரணமாக.

அவள் சொன்னபடியே தலைவன் உடையைக் கிழித்துத் தலைக்குக் கட்டுப் போட்டு சத்ருஞ்சயன் அவனைத் தூக்கிக் கொண்டு எட்ட இருந்த மரத் தடிக்குச் சென்று அவன் மேலங்கியை கழற்றி தலைக்கு சுருட்டி வைத்து மிக லேசாகப் படுக்க வைத்தான். பிறகு சந்திரமதி நின்றிருந்த இடத்துக்கு வந்து, "அடுத்து என்ன செய்ய வேண்டும்?" என்று வினவினான்.

சிறிது தூரத்தில் ஆடுகள் தழை மேய்ந்து கொண்டிருந்ததைச் சுட்டிக் காட்டிய சந்திரமதி, “அந்த ஆடுகளைக் கோல் கொண்டு வளையுங்கள். தழைகள் போக மீதியுள்ள சுள்ளிகளை விறகாக வெட்டிக் கட்டித் தூக்கிக் கொள்ளுங்கள்” என்று உத்தரவிட்டாள்.

‘அட சலூம்ப்ரா! வீரனா நீ? இந்த ராட்சஸியிடம் அகப்பட்டுக் கொண்டாயே’ என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டு அவள் சொன்னபடியே செய்து விறகுக் கட்டைகளைக் கட்டித் தலையில் தூக்கிக் கொண்டு கோலையும் எடுத்துக் கொண்டான். கோலுடன் தலைவன் வாளையும் எடுத்துக் கொள்ள முயன்றவனைத் தடுத்த சந்திரமதி, “அவன் வாளை அவன் பக்கத்திலேயே வைத்து விடுங்கள்” என்று சொன்னாள்.

பதிலேதும் பேசாமல் அவள் கட்டளையை நிறைவேற்றுவதற்கும் மாலை நெருங்குவதற்கும் சமயம் சரியாயிருக்கவே, ஆடுகளைத் திரட்டி ஓட்டிக் கொண்டு கிளம்பினான் சத்ருஞ்சயன். சந்திரமதியும் ஏதுமே நடக்காததுபோல் காளையை அவிழ்த்து அதன் மீது ஏறிக்கொண்டு குழலை வாயில் வைத்து ஊதினாள். அந்தக் குழலோசை துவங்கியதுமே ஆடுகள் திரண்டு ஊர்ந்தன, கோட்டையை நோக்கி. ஒன்றையொன்று முட்டி விளையாடிக் கும்பலாகச் சென்ற ஆட்டுக்குட்டிகளை சாதாரண சமயமாயிருந்தால் சத்ருஞ்சயன் ரசித்திருப்பான். ஆனால் இன்னொரு

வீரனை மரணாவஸ்தையில் மரத்தின் கீழ் கிடத்தி விட்டு வந்ததை அவனால் பொறுக்க முடியாததால் இதய வேதனையுடனேயே அவன்நடந்தான்.

ஆனால் சந்திரமதி எதைப் பற்றியும் நினைத்த தாகத் தெரியவில்லை. முதல் நாளைப் போலவே மதுரமாக குழலை ஊதிக் கொண்டு சென்றாள். அவளை நினைக்க நினைக்க ஏதும் புரியாத, குழம்பிய நிலையை அடைந்தான் வீரனான சத்ருஞ்சயன். அவளை அன்று மென்மையான உள்ளம் படைத்த காதலியாகவும் பார்த்தான். மரக்கிளையையே ஆயுத மாகக் கொண்டு பெரும் வீரனொருவனை வீழ்த்தக் கூடிய ராட்சஸியாகவும் கண்டான். இத்தனையையும் விட காய மடைந்தவனை வனத்திலேயே விட்டுப் போகும் இரக்கமற்ற அரக்கியாகவும் கண்டதால் மனம் பொறுக்காமல் அவள் காளையை அணுகி, "சந்திரமதி! காவலர் தலைவன் நல்ல காயமடைந் திருக்கிறான்," என்று இழுத்தான்.

பதிலுக்கு அவள் குழலிலேயே இரண்டு ஸ்வரங் களை ஊதினாள் "உம் உம்" என்று.

"அவனை இந்த நிலையில் அனாதரவாக விட்டுப் போவது தவறு," என்றான் சத்ருஞ்சயன்.

இம்முறை குழலை வாயை விட்டு எடுத்தாள் சந்திரமதி. "சரி என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டாள்.

"நீ காளையிலிருந்து இறங்க வேண்டும்."

"இறங்கினால்?"

"அவனை இதன் மீது கிடத்திப் பிடித்துக் கொண்டு வருவேன்."

"அவன் தலைக் காயத்துக்குக் காவலர்களுக்கு என்ன சமாதானம் சொல்வதாக உத்தேசம்?"

"ஏதாவது சொல்கிறேன்."

"அப்படியானால், நீங்கள் அவனைத் தோளில் தூக்கிக்கொண்டு வாருங்கள்" என்ற சந்திரமதி காளையை நகர்த்தினாள்.

அவளை எரித்து விடுவதுபோல பார்த்த சத்ருஞ் சயன், "அடி ராட்சஸி!" என்று சற்று இரைந்தே சொன் னான். பிறகு திரும்பி தலைவனைப் படுக்க வைத்த இடத்துக்குச் சென்றான். சென்றதும் நின்ற வண்ணம் அவனை நோக்கினான். பிறகு அவன் கத்தியை எடுத்து அதில் ஒட்டியிருந்த மண்ணைத் துடைக்கலானான்.

அந்தச் சமயத்தில், "அதோ இருக்கிறான் கொலை யாளி" என்று யாரோ கூவினார்கள். அடுத்த சில விநாடிகளில் காவலர் பலர் சத்ருஞ்சயனைச் சூழ்ந்து கொண்டார்கள். "கத்தியை இப்படிக் கொடு" என்ற ஒருவன், "உன்னைச் சிறை செய்திருக்கிறோம்" என்றான். உருவிய வாட்களுடன் காவலர் பலர் அவனை நெருங்கினார்கள்.

# 9
# சிறையில் திருமணம்

காவலர்களால் சூழப்பட்ட பின்பும், அவர்களில் சிலர் அவன் மீது கொலைக் குற்றம் சாட்டி கூவிய பின்பும், அந்த இடத்திலிருந்து சிறிதும் நகராமலும், காவலரைச் சிறிதளவும் லட்சியம் செய்யாமலும் நின்ற சத்ருஞ்சயன், தன்னையும் காயமடைந்த காவலர் தலைவனையும் விட்டு சந்திரமதி காளையில் ஏறிச் சென்று விட்டதையும், அவள் குழலூதும் சப்தம் அப் பொழுதும் காதில் விழுந்ததையும் எண்ணி, 'இத்தனை இரக்க மற்றவளா சந்திரமதி?' என்று தன்னைத் தானே வினவிக் கொண்டான்.

இப்படி சந்திரமதியைப் பற்றிய சிந்தனையில் திளைத்திருந்தபடியால் காவலனொருவன் அவனை அணுகியதையோ, அணுகிக் கேள்விகளைக் கேட்ட தையோ உடனடியாக உணர்ந்தானில்லை, சத்ருஞ் சயன்.

அப்படி ஏதும் பதில் சொல்லாத சத்ருஞ்சயனை நோக்கி இரண்டாம் முறையாகக் கேள்வியைத்

திருப்பிய காவலரில் ஒருவன், "எங்கள் தலைவரை ஏன் கொன்றாய்?" என்று இரண்டாம் முறையாகக் கேட்டான்.

சத்ருஞ்சயன் அவனை மிகுந்த வெறுப்புடன் நோக்கி, "யாரும் கொல்லவில்லை" என்றான், வெறுப் பின் சாயை குரலிலும் விளங்க.

"ஏன்?" என்று ஏதோ கேட்க வேண்டுமென் பதற்காகக் கேட்டான் காவலன்.

"தவறுதான்."

"தவறா?"

"ஆம், உங்கள் தலைவன் என்னைக் கொன்றி ருப்பார் முடிந்திருந்தால். ஆனால் நானும் தப்ப வேண்டியிருந்தது." இதைச் சாதாரணமாகச் சொன்ன சத்ருஞ்சயன் தன்னிடம் கத்தியில்லை என்பதைத் தெரிவிக்கத் தனது கச்சையிருந்த இடத்தைத் தடவிக் காட்டினான்.

அவனிடம் வாளில்லையென்பதை அப்பொழுதே உணர்ந்த காவலன், "உன்னிடம் கத்தியில்லையா?" என்று வினவினான்.

"இல்லை" என்று ஒற்றைச் சொல்லில் பதில் சொன்னான் சத்ருஞ்சயன்.

"அப்படியானால் தலைவரை எப்படிக் காயப் படுத்தினாய்?" என்று சந்தேகத்துடன் விசாரித்தான். காவலர் தலைவன் போரில் வல்லவனென்பதையும்,

அவனை சுலபமாக யாரும் தாக்கிக் காயப்படுத்திவிட முடியாதென்பதையும் காவலன் அறிந்திருந்ததால் சத்ருஞ்சயனை வியப்புடன் நோக்கவும் செய்தான்.

சத்ருஞ்சயன் காவலன் வியப்பைக் கவனித்தும் கவனிக்காதவன் போலவே பதில் சொன்னான், "முதலில் உங்கள் தலைவரைக் கவனி. அவர் காயம் உடனடியாகக் கவனிக்கப்பட வேண்டும்" என்று.

அதைப் பற்றி காவலன் லட்சியம் செய்யாமல், "எங்கள் தலைவர் வாளுடன் இருந்தார். அப்படி யிருக்க அவரை எப்படிக் காயப்படுத்தினாய்?" என்று விசாரித்தான்.

பதிலுக்கு எட்ட இருந்த கிளையைக் காட்டிய சத்ருஞ்சயன், "அதோ இருக்கிறது எனது ஆயுதம்" என்றான்.

காவலன் அப்பொழுதும் சுறுசுறுப்பைக் காட்ட வில்லை. "அத்தனை பெரிய கிளையாலா அடித்தாய்?" என்று சினத்துடன் கேட்டான்.

"ஆம், வேறு சிறிய கிளை கிடைக்கவில்லை" என்றான் சத்ருஞ்சயன்.

அப்பொழுதும் அந்தக் காவலன் விசாரணையை முடிக்கவில்லை. ஜஸ்வந்தின் தலையிலிருந்த கட்டைப் பார்த்தான். "தலைவருக்கு யார் காட்டு போட்டது?" என்று கேட்டான்.

"நான்தான்."

"ஏன்?"

"அவன் சாகாதிருப்பதற்காக."

"அவரைக் காப்பாற்ற வேண்டிய அவசியம்?"

"ஜீவகாருண்யம்" என்று கூறிய சத்ருஞ்சயன் தனது நிதானத்தை இழந்து, "முட்டாள்! முதலில் உனது தலைவனைத் தூக்கிக் கோட்டைக்குள் எடுத்துச் சென்று சிகிச்சைக்கு ஏற்பாடு செய். என்னையும் சிறை செய். மீதி விஷயங்களை விசாரணையின் போது சொல்கிறேன்" என்று சீறியதால், காவலன் தனது தலைவனைக் கவனிக்கச் சென்றவன் சிறிது நேரம் அவன் கிடந்த நிலையையும் தலைக்கட்டையும் பார்த்து விட்டு, "இவரைக் காயப்படுத்திய பிறகு நீ ஏன் ஓடவில்லை?" என்று வினவினான்.

காவலன் முட்டாள்தனம் வினாடிக்கு வினாடி அதிகரிப்பதைப் பார்த்ததால் எரிச்சல் வசப்பட்ட சத்ருஞ்சயன். "ஓடிப் பழக்கமில்லை" என்று கூறி விட்டு, "ஜஸ்வந்த்சிங்கை நீ எடுத்துக் கொள்கிறாயா நான் எடுத்துக் கொள்ளட்டுமா?" என்று சீறினான்.

அதற்குமேல் தாமதிக்க விரும்பாத காவலன் மற்றக் காவலர்களை நோக்கி. "உம் எடுங்கள் தலைவரை. எடுத்து ஏதாவது ஒரு புரவிமீது குறுக்கே படுக்க வைத்துக் கோட்டைக்குக் கொண்டு செல்லுங்கள்" என்று உத்தரவிட்டு, "நீயும் என்னுடன் வா" என்று சத்ருஞ்சயனை அழைத்தான்.

மற்ற வீரர்கள் புரவியொன்றின்மீது ஜஸ்வந்த் சிங்கைப் படுக்க வைத்துப் பிடித்துக் கொள்ள, இன்

னொருவர் புரவியின் கடிவாளத்தைப் பிடித்து முன் னால் இழுத்துச் செல்ல, காவலர் கூட்டம் கோட் டையை நோக்கி நகர்ந்தது.

இன்னொரு புரவியில் சத்ருஞ்சயன் ஏறிக் கொண்டு, "சரி போவோம்" என்று புரவியை நகர்த் தினான்.

அந்தப் புரவிக்குரியவன், "ஐயோ! அது என் புரவி!" என்று கூவினாலும் அதைப் பற்றிக் கவலைப் படாத சின்ன சலூம்ப்ரா, "நான் சிறைப்பட்டவன் நடந்து வந்தால் கோட்டையை அடைய நேரமாகும்" என்று கூறிவிட்டுத் தன்னைச் சிறை செய்த காவலனுடன் பயணமானான். அந்தக் காவலனும் நடந்து செல்ல சோம்பேறித்தனப்பட்டு, "ஆம் ஆம். இவர் சொல்வது உண்மை. நீ நடந்தே வா" என்று கூறிவிட்டு சத்ருஞ்சயனுடன் கோட்டையை நோக்கிச் சென்றான்.

கோட்டையை அவர்கள் அணுகியபோது இரவு மூண்டு கோட்டை விளக்குகள் முதல் நாளைப் போலவே ஜொலிக்க ஆரம்பித்தன. முதல் நாள்தான் அந்தக் கோட்டையில் நுழைந்ததற்கும் மறுநாள் நுழை வதற்கும் உள்ள வேறுபாட்டை உணர்ந்த சத்ருஞ்சயன் லேசாக நகைத்தான்.

'நேற்று குருநாதருடன் வாளை விறகு கட்டையில் சொருகி திருடன்போல் நுழைந்தேன். இன்று காவலர் தலைவனைக் கொல்ல முயன்ற குற்றத்திற்காகச் சிறைப்பட்டு நுழைகிறேன். நேற்று நுழைந்தபோது நான் பிரம்மசாரி. இன்று கிருகஸ்தன், சந்திரமதியை மணந்

தவன் என்ற முறையில் நுழைகிறேன். ஒரே நாளில் மனிதனின் இன்பதுன்பங்கள் எத்தனை மாறுதலடை கின்றன!' என்று தனக்குள் தனது நிலையை சீர் தூக்கிப் பார்த்த சத்ருஞ்சயன் தன்னை எதிர் நோக்கி யுள்ள தண்டனையைப் பற்றிச் சிறிதளவும் சிந்திக் காமல் காவலருடன் சென்றான்.

அவனைச் சிறை செய்த காவலன் அவனை அந்தக் கோட்டையின் நீதிபதியிடம் அழைத்துச் சென் றான். குற்றவாளியைச் சிறையில் வைக்குமாறும் மறுநாள் விசாரித்துத் தண்டனை அளிப்பதாகவும் நீதிபதி கூறவே காவலன் அவனைச் சிறைக் கூடத் துக்கு அழைத்துச் சென்றான்.

ஒண்டாலாவின் சிறைக்கூடம் நல்ல பாறாங் கற்களால் கட்டப்பட்டிருந்தது. அறைகளில் இரும்புக் கம்பிகள் பலமாகப் பொருத்தப்பட்டிருந்தன. காவ லும் அப்படி ஒன்றும் மோசமில்லை. சிறைக்கூடத்தின் ஆரம்பத் தாழ்வரையில் உட்கார்ந்த சிறைக்கூடத் தலைவன் பெரும் சாவிக் கொத்தொன்றை வைத்துக் கொண்டிருந்தான். காவலன் சத்ருஞ்சயனை அழைத்து வந்ததும், "இன்னொரு கைதியா!" என்று அலுத்துக் கொண்டான்.

"ஆம், பயங்கரமான கைதி. இவனை மிகவும் ஜாக்கிரதையாகக் காவல் செய்ய வேண்டும்;" என்றான் காவலன்.

அப்பொழுது இருந்த இடத்தைவிட்டு எழுந்தி ருக்காத சிறைக் காவலன், "இவன் என்ன குற்றம் செய்தான்?" என்று வினவினான்.

"நமது கோட்டைக் காவலர் தலைவரைக் கொல்ல முயன்றான்" என்றான் காவலன்.

"அவ்வளவுதானா?" என்று சிறைக்காவலன், கொல்லாதது பிசகுபோல் சொல்லிவிட்டு மெல்ல எழுந்திருந்து உட்புறமிருந்த அறைகளை நோக்கிச் சாவிக் கொத்துடன் நடந்தான். அந்த அறைகளில் பல விதமான கைதிகள் இருந்தார்கள். சிலர் நீண்ட காலம் இருந்திருக்க வேண்டுமென்பது அவர்கள் நீண்ட தாடி மீசைகளாலும், கத்தரிக்கப்படாமல் தொங்கிய தலை மயிரிலிருந்தும் தெரிந்தது சத்ருஞ்சயனுக்கு. அவர்கள் அடிக்கடி உணவைப் பார்ப்பதில்லையென்பதற்கு அவர்களின் மெல்லிய தேகங்களே உதாரணமாயிருந் தன. இந்தச் சிறைக்குள் நுழைந்தவனுக்கு சிறையே சமாதியாகும் என்பதை சத்ருஞ்சயன் புரிந்து கொண் டாலும் அதைப் பற்றிக் கவலைப்படாமல் சிறை அதிகாரியைப் பின் தொடர்ந்தான். இரண்டு வரிசை களாக இருந்த அந்த அறைகளைத் தாண்டி கோடி யிலிருந்த ஒரு அறைக்கு வந்த சிறை அதிகாரி சத்ருஞ்சயனை அந்த அறைக்குள் போகும்படி சைகை காட்டினான். அவன் போனதும் அறைப்பூட்டைப் பூட்டி இழுத்துப் பார்த்து, "இனி இவனைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்" என்று கூறிவிட்டு சத்ருஞ் சயனை அழைத்து வந்த காவலனுக்குப் போக விடை கொடுத்தான்.

போகுமுன்பு காவலன் சிறை அதிகாரியை நோக்கி, "இவன் மிக அபாயமானவன். எச்சரிக்கை யுடன் கவனியுங்கள்" என்று எச்சரித்தான்.

"இங்கிருந்து இதுவரை யாரும் உயிருடன் வெளியே சென்றதில்லை. வரும்போது நடந்து வரு வான். போகும்போது நான்கு பேர் அவனைத் தூக்கிச் செல்வார்கள். இதுதான் பழக்கம்" என்று உற்சாக மாகச் சொன்ன சிறைக் காவலன் தனது நகைச் சுவையை எண்ணி மிகக் குரூரமாக நகைத்தான்.

அந்த நகைப்பைக் கேட்டதால் கிலி பிடித்த காவலன், "சிறைக் காவலரே! இவருக்கு ஏதும் தீங்கு ஏற்படக் கூடாது இன்றிரவு. நாளை நீதிபதி விசாரிக்கப் போகிறார்" என்று எச்சரித்துவிட்டுச் சென்றான்.

சிறைக்குள் சென்ற சத்ருஞ்சயன் சிறையைச் சுற்று முற்றும் கவனித்து அதிலிருந்து தப்ப ஏதும் வழி யில்லை என்பதைப் புரிந்து கொண்டதால் படுக்க உத் தேசித்துத் தரையை நோக்கினான். தரை கரடு முரடா யிருந்தது. சில இடங்களில் பெயர்ந்தும் இருந்ததால் அதில் படுப்பது கஷ்டம் என்பதை உணர்ந்து கொண்டதால்,

"காவலரே! காவலரே!" என்று கூவினான்.

அப்பொழுதுதான் மீண்டும் ஆசனத்தில் உட் கார்ந்து கொண்ட சிறைக் காவலன் எரிச்சல் பட்டுக் கொண்டு மீண்டும் எழுந்து வந்து,

"ஏன் கூவுகிறாய்? உனக்கு என்ன வேண்டும்?" என்று வினவினான்.

"படுக்கப் பாய்வேண்டும்" என்றான் சத்ருஞ்சயன்.

அவன் பைத்தியமல்ல என்பதைத் தீர்மானித்துக் கொள்ள அவனை உற்று நோக்கிய சிறைக் காவலன், "பாயா வேண்டும்?" என்று கேட்டான்.

"ஆம். தரை சரியாயில்லை," என்று சத்ருஞ்சயன் பிளந்து கிடந்த தரைப்பூச்சைச் சுட்டிக் காட்டினான்.

"கவலைப்படாதே. நாளைக்கு இதைப் பூசச் சொல்கிறேன்," என்ற சிறைக் காவலன் திரும்பிச் செல்ல முயன்றான்.

"ஐயா அதிகாரி!" என்று மீண்டும் குரல் கொடுத்தான் சத்ருஞ்சயன்.

சிறைக் காவலன் திரும்பி, "என்ன?" என்று விசாரித்தான் கடுமையான குரலில்.

"பாய் வேண்டுமென்று சொன்னேன்" என்று நினைவுபடுத்தினான் சத்ருஞ்சயன்.

"மெத்தை வேண்டாமா?" என்று சிறைக் காவலன் கேட்டான் மிகுந்த எரிச்சலுடன்.

"வேண்டாம், பாய் போதும்" என்ற சத்ருஞ் சயனை நிச்சயமாக பைத்தியம்தானென்று தீர்மானித் துக் கொண்டு சென்ற சிறைக் காவலன் தனது ஆசனத்தில் மீண்டும் அமர்ந்து கொண்டு குரானை சிறிது பெரிதாகவே ஓத ஆரம்பித்தான்.

சத்ருஞ்சயன் அதற்குப் பிறகு ஏதும் கேட்காமல் சிறைத் தரையில் உட்கார்ந்து சுவரில் சாய்ந்த வண்ணம் சிந்தனையில் இறங்கினான். அன்று பகல்

நிகழ்ச்சிகள் அவன் மனத்தில் வலம் வந்ததால் பெரிதும் துன்பத்தின் வசப்பட்டான் சத்ருஞ்சயன்.

'புஷ்பம் போலிருந்த சந்திரமதி இரக்கமற்ற அரக்கியாக எத்தனை துரிதமாக மாறிவிட்டாள்?' என்று திரும்பத் திரும்ப நினைத்ததால் அவன் மனம் வெந்து கொண்டிருந்தது. ஜஸ்வந்த் இறந்திருந்தால் அவள் கொலைகாரியாக மாறி இருப்பாளே என்ற எண்ணம் அவனை வாட்டிக் கொண்டிருந்தது.

இப்படி சத்ருஞ்சயன் சிறையில் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில் மல்லிநாதர் இல்லத்திலும் இதைப்பற்றி பேச்சு நடந்து கொண்டிருந்தது. நடந்த விவரங்களை மகளிடமிருந்து அறிந்த மல்லிநாதர் சிந்தனையில் ஆழ்ந்தார் நீண்ட நேரம். "வேறு வழி யில்லை. ஜஸ்வந்த் ராஜபுத்திரரில் சீர் கெட்டவன். அவனை அடித்தது சரிதான். ஆனால் உன் புருஷனை ஏன் விட்டு வந்தாய்?" என்று வினவினார் மல்லிநாதர்.

சந்திரமதி தந்தையை ஏறிட்டு நோக்கி, "அவர் வர மறுத்தார்" என்றாள்.

"ஏன்?"

"காயமடைந்த ஜஸ்வந்தைத் தூக்கி வருவதற்காக"

"கடைசியில் சிறைப்பட்டிருக்கிறான்" என்ற மல்லிநாதர், "என்ன குற்றத்துக்குத் தெரியுமா?" என்று வினவினார்.

"தெரியாது" என்றாள் சந்திரமதி.

“ஜஸ்வந்தை மண்டையிலடித்துக் கொல்ல முயன் றதற்கு” என்றார் மல்லிநாதர்.

“அதை நானல்லவா செய்தேன்?” என்று திகைப்பு டன் கூறினாள் சந்திரமதி.

“உன்னை அவன் காட்டிக் கொடுக்க இஷ்டப்பட வில்லை. குற்றத்தைத் தன் மீது போட்டுக் கொண் டான்” என்ற மல்லிநாதர், “இவனை இன்றிரவு தப்ப வைக்காவிட்டால் நாளைக் காலையில் மரண தண் டனை அளித்து விடுவான் கோட்டைத் தலைவன். அப்துல்லா பழைய விரோதங்களை மறப்பவன் அல்ல. இருமுறை பெரிய சலூம்ப்ரா அவனைப் போரில் முறியடித்திருக்கிறார். அதற்குப் பழி வாங்க சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. அதைக் கைவிட மாட்டான் அப்துல்லா” என்றும் விளக்கினார்.

“இப்பொழுது என்ன செய்வது?” என்று கேட் டாள் சந்திரமதி.

“சிந்திப்போம்” என்ற மல்லிநாதர், “சந்திரமதி! எதற்கும் இன்றிரவு நீயும் சிறைக்குப்போ ” என்றார், “உணவருந்தி சித்தம் செய்துகொள்” என்றும் கூறினார்.

உணவை வெகு சீக்கிரம் முடித்துக் கொண்ட சந்திரமதியை அழைத்துக் கொண்டு சிறைச் சாலைக்கு வந்த மல்லிநாதர் கையில் சாவியுடன் ஆசனத்தில் சாய்ந்து உறங்கிக் கொண்டிருந்த காவலனை, “முஸபர், முஸபர்” என்று அழைத்து அசக்கினார்.

அவர் அசக்கலால் விழித்துக் கொண்ட சிறைக் காவலன், "யார்? ஆசிரியரா?" என்று வியப்புடன் வினவினான் மல்லிநாதரைப் பார்த்து.

"ஆம் முஸபர்" என்று மல்லிநாதர், "நமது ஜஸ்வந்தைக் கொலை செய்ய முயன்றவன் எந்த அறையில் இருக்கிறான்?" என்று வினவினார்.

ஓண்டாலா கோட்டையில் எல்லாராலும் மதிக்கப்பட்ட மல்லிநாதர் இந்தக் கேள்வியைக் கேட்டதும் பதிலேதும் சொல்லாமல் சத்ருஞ்சயன் இருந்த அறைக்கு அழைத்துச் சென்றான். "அதோ சாய்ந்து கண்ணை மூடிக் கொண்டிருக்கிறான்" என்று சுட்டிக் காட்டினான் சிறை அதிகாரி.

"பூட்டைத் திற" என்றார் மல்லிநாதர்.

"எதற்கு?"

"இவன் என் பெண்ணை ஏமாற்றி விட்டான்"

"அந்தக் குற்றத்தையும் செய்தானா?"

"ஆம். அதற்குத் தண்டனை அளிக்க வேண்டும்" என்ற மல்லிநாதரை மேற்கொண்டு கேள்வி ஏதும் கேட்காமல் அவரிடம் சாவியைக் கொடுத்து, "குருநாதரே! உங்களுக்கு இந்தக் கோட்டையில் எங்கும் தடை கிடையாது என்பது எனக்குத் தெரியும். கோட்டைத் தலைவர் அப்துல்லாவுக்கோ உங்களிடம் மரியாதை உண்டு. இஷ்டப்பட்ட தண்டனையை

இவனுக்கு அளியுங்கள்" என்று கூறிவிட்டுச் சென்று மீண்டும் தனது ஆசனத்தில் அமர்ந்து கொண்டான்.

மல்லிநாதர் சிறைப் பூட்டைத் திறந்து கொண்டு உள்ளே சென்றார். அவரை ஏறெடுத்து நோக்கிய சத்ருஞ்சயன் அவருக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த சந்திரமதியைப் பார்த்து, "இவளை எதற்காக இங்கு அழைத்து வந்தீர்கள்?" என்று வினவினான்.

மல்லிநாதர் அவனைக் கூர்ந்து நோக்கினார். "நீ இருக்க வேண்டிய இடத்தில் இவள் இருக்க வேண்டியவள். தவிர உண்மைக் குற்றவாளி இவள்தான்" என்றவர், "அதிக நேரமில்லை என்னுடன் வாதாட, எழுந்திரு" என்றார்.

எழுந்திருந்த சத்ருஞ்சயன், "சொல்லுங்கள்," என்றான்.

பதிலேதும் சொல்லவில்லை மல்லிநாதர். தனது கச்சையிலிருந்து இரண்டு மஞ்சள் கயிறுகளை எடுத்து, "இந்தா! இவற்றில் ஒன்றை உன் மனைவியின் கையில் கட்டு. இன்னொன்றை அவள் கழுத்தில் கட்டு" என்றார்.

இரண்டாவது கயிற்றில் மாங்கலியமும் இருந்ததைப் பார்த்த சத்ருஞ்சயன், "இந்தச் சடங்கு இப்பொழுது எதற்கு?" என்று வினவினான்.

"உங்களை உலகமறிய கணவன் மனைவியாக அறிவிப்பது இந்தக் கயிறுகள்தான். இத்துடன் நானும் உனது தந்தையும் செய்து கொண்ட சபதமும் பூர்த்தியாகிறது" என்றார்.

வேண்டா வெறுப்பாக அவள் கையில் கங்கணத்தையும் கழுத்தில் மங்கள நாணையும் கட்டினான் சத்ருஞ்சயன். அதற்குப் பிறகு அங்கு நிற்காத மல்லிநாதர் சிறைக் காவலனிடம் சென்று "முஸபர்!" என்றழைத்து சாவியைக் கொடுத்தார்.

அதுவரை கண்களை மூடிக் கொண்டிருந்த முஸபர், "உங்கள் மகளெங்கே?" என்று கேட்டான்.

"அவனுடன் சிறையிலிருக்கிறாள்" என்றார் மல்லிநாதர்.

"ஏன் குரு?" என்று கேட்டான் முஸபர்.

"உண்மைக் குற்றவாளி என் மகள்தான். அவன் குற்றமேதும் செய்யவில்லை" என்றார் மல்லிநாதர்.

"குரு! உங்களை இந்த நேர்மையால்தான் எல்லாரும் மதிக்கிறார்கள். நியாயத்துக்காக மகளையும் சிறை செய்யும் மகான் உங்களைத் தவிர வேறு யார் இருக்க முடியும்?" என்ற முஸபர், "குரு! ஒன்று சொல்கிறேன், கேட்கிறீர்களா?" என்றுகேட்டான்.

"சொல் முஸபர்" என்றார் மல்லிநாதர்.

"மகளை அழைத்துப் போங்கள். அந்த சைத்தான் சாகட்டும்" என்றான் முஸபர்.

மல்லிநாதர் அதற்கு ஒப்பவில்லை. "முஸபர்! என் மகள் குற்றம் செய்திருக்கிறாள் என்பதை உணர்ந்தும் நான் அவளைச் சுதந்திரமாகவிட்டால் நாளைக்கு

இந்தக் கோட்டையே என்னைக் காறித் துப்பும். அவளும் இருக்கட்டும் சிறையில்" என்றார்.

முஸபர் அவரை மீண்டும் கேட்டான், "அந்த சைத்தான் ஆண்பிள்ளை. பெண் பிள்ளை அவனுடன் தங்கலாமா?" என்று.

"அவன் அவள் கணவன்" என்று கூறிவிட்டு மல்லிநாதர் போய்விட்டார் சிறைச்சாலையை விட்டு.

"கணவன் மனைவி. ஒரே சிறை. நாளைக்கு என்ன ஆகிறதோ? இன்றிரவு மஜாவாயிருக்கட்டும்" என்று சொல்லிக் கொண்டு ஆசனத்தில் சாய்ந்தான், சிறை அதிகாரி.

சிறை அறைக்குள் கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் எரித்து விடுபவர்கள் போல் பார்த்துக் கொண்டார்கள். "இது ஒரு தந்திரமா?" என்று சீறினான் சத்ருஞ்சயன்.

"இதில் தந்திரமென்ன இருக்கிறது?" என்று அவளும் சீறினாள்.

"சிறையில் இரவில் எதற்காகத் தாலி கட்ட வேண்டும்?" என்று கேட்டான் சத்ருஞ்சயன்.

"பகலில் நடந்ததை ஊர்ஜிதப்படுத்த" என்றாள் சந்திரமதி. பிறகு சிறைச் சுவரில் சாய்ந்து கொண்டாள்.

"சத்ருஞ்சயன் சிறையின் நடுப் பகுதியிலிருந்து அடித்த விளக்கு வெளிச்சத்தில் சந்திரமதியைக்

கவனித்தான். அவள் அவன் பார்வையை லட்சியம் செய்யவில்லை. கண்களை மூடிக் கொண்டாள். அந்த நிலையில் அவள் அழகு அவன் மனத்தைப் பெரிதும் அலைக்கழித்தது. அந்தச் சிறு வெளிச்சத்தில் மூடிய கண்களுடன் குவிந்த தாமரை போல விளங்கினாள் சந்திரமதி. இருமுறை அப்படியும் இப்படியும் சிறையில் நடந்த சத்ருஞ்சயன் அவள் முன்பு நின்று, "சந்திரமதி! இது என்ன நாடகம்?" என்றான். பிறகு அவளை வலுக் கட்டாயமாகத் தரையில் உட்கார வைத்து அவளுக்கு எதிரில் தானும் உட்கார்ந்தான்.

"நாடகமாட நான் நடிகையல்ல. பொய் சொல்ல எனக்குத் தெரியாது. நான் செய்த பிழையைப் பிறர் மீது போடும் துர்ப்பழக்கமும் எனக்குக் கிடையாது" என்றாள் சந்திரமதி.

அவன் உட்கார்ந்த நிலையில் அவள் தோளைக் குலுக்கினான். அவள் கண் விழித்துப் பார்த்தாள். அதில் பெரும் குற்றச்சாட்டு இருந்தது. வேதனையும் இருந்தது. கமல இதழ்களைத் திறந்து பேசலானாள் சந்திரமதி.

# 10
# சாய்ந்த தாமரை

அவன் கண்களை அவள் கண்கள் நிர்ப்பயமாகச் சந்தித்தன. "என் கணவரே! நான் ஜஸ்வந்தை அடித்த தால் சினமுற்றிருக்கிறீர்கள். அடிக்காவிட்டால் நம் கதி என்னவாகியிருக்கும் என்பதை யோசித்தீர்களா? உங்களிடம் வாளில்லை, அவனிடம் வாளிருந்தது. என்னை மணக்க முயன்றான், தந்தை மறுத்து விட்டார். மடக்க சமயம் பார்த்தான். சமயம் கிடைக்க வில்லை. நேற்றுதான் சமயம் கிடைத்தது. மற்ற ராஜபுதன அபலைகளைப் போல் நானும் இருந்திருந் தால் அவன் என்னை என்ன செய்திருப்பானோ சொல்ல முடியாது. ஆனால் எனது பலம் அவனுக்குத் தெரியும். தந்தையிடம் வாள்பயிற்சி பெற வந்தான். அங்கு என் தனிமையைப் பயன்படுத்திக் கொள்ள முயன்றான். என் கையிலிருந்த வாளினால் அவன் வாளைத் தட்டி எறிந்தேன். என் வாளைக் கொண்டு ஆட்டைத் துரத்துவதைப் போல இந்த நகரின் வீதிகளில் அவனைத் துரத்தினேன். அதனால் அவன்

எனக்கு ராட்சஸிப் பட்டத்தைச் சூட்டினான். ஆனால் நான் கவலைப்படவில்லை. ராஜபுதனத்தின் நிலையைப் பார்த்து என் வாழ்க்கையை அமைத்துக் கொண்டேன். இந்துப் பெண்களுக்கு நாடு இன்றிருக்கும் நிலைமையில் தற்காப்பு வன்மை மிக மிக அவசியம். ஆதலால் வாள் பயிற்சி பெற்றேன். வேலையும் எறிய எனக்குத் தெரியும். இருபதடி தூரத்திலிருக்கும் எந்தத் துஷ்டமிருகத்தையும், அது மனிதராயிருந்தால் கூட, குறுவாளெறிந்து கொல்ல முடியும் என்னால். ராஜபுத்ரர்கள் ஆண்மையிழந்து மொகலாயருக்கு அடிமையாக இருக்கும் இந்தக் காலத்தில், ராஜபுத்ர ஸ்திரீகளுக்குத் தற்காப்பைத் தவிர வேறு வழியில்லை" என்று பேசினாள் சந்திரமதி. பேசப் பேச அவள் உணர்ச்சி அதிகப்பட்டது. "இந்தக் கோட்டை மான்சிங் வசத்திலிருக்கிறது. ஆனால் அதற்குத் தலைவன் அப்துல்லா. ஏன்? அவன் ஜிஹாங்கீருக்கு வேண்டியவன். எசமானர்களுடைய முகம்கோணாமல் நடந்து மான்சிங் பதவியில் இருக்கிறான். அந்த மாதிரி ராஜபுத்ரர்கள் இன்று அதிகம். அவர்களால் ராஜபுதனம் இதர இனத்தார்களுடைய பரிகாசத்துக்கு இலக்காகியிருக்கிறது. ராஜபுத்ரர்கள் பெண்களை அரசியல் சதுரங்கத்தில் விற்பனைப் பொருள்களாக்கி விட்டார்கள். ஆனால் ஆண்களில் ராணா பிரதாப்பைப்போல் பெண்களிலும் மானமுள்ளவர்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஒருத்தி நான். என் கணவரைத் தவிர வேறு ஒருவரும் என்னைப் பார்க்கவும் முடியாது, என்னைத் தொடவும் முடியாது. தொட்டபின்

பிழைக்கவும் முடியாது. நீங்கள் மட்டும் இல்லையேல் நேற்று கதை வேறாயிருந்திருக்கும். என்னைத் தொட முயன்றிருப்பான் ஜஸ்வந்த், ஆனால் மரணத்தைப் பிடித்திருப்பான். நீங்கள் மட்டுமென்ன? என்னை மணக்கவா வந்தீர்கள்? தூக்கிச் செல்ல வந்தீர்கள், இன்னொரு சோம்பேறி ராஜாவுக்கு" என்ற சந்திரமதி உணர்ச்சிப் பெருக்கத்தில் பெருமூச்சு விட்டாள்.

அவள் பேச்சு சத்ருஞ்சயனை அடியோடு உலுக்கி விட்டது. அவள் சொல்வதில் நியாய தர்மங்கள் நிரம்ப இருப்பதைக் கவனித்தான். அவள் ராட்சஸியா யிருப்பதே நியாயம் என்று எண்ணிக் கொண்டு அவளருகில் உட்கார்ந்தான். அவள் தோளைத் தன் இரு கைகளாலும் பற்றி, "சந்திரமதி! உன் நியாயம் எனக்குப் புரிகிறது. ஆனால் எல்லா நியாயங்களும் எல்லா சமயங்களுக்கும் பொருந்தா. உன்னை நான் தூக்கிக் கொண்டு போக வந்தது, தவறல்ல. முதலில் நீ மல்லிநாதர் மகளென்பது எனக்கும் தெரியாது, என் தந்தைக்கும் தெரியாது. அப்படித் தெரிந்திருந்தால், உன்னை எனக்கு மணமுடிப்பதை, நாமிருவரும் பிறப் பதற்கு முன்பு உன் தந்தையிடம் செய்த சத்தியத்தை மீறியிருக்கமாட்டார் என் தந்தை. நீ இருக்குமிடத்தை உன் தந்தையிடம் விசாரிக்கச் சொல்லித்தான் உத்தர விட்டார். விசாரிக்கத்தான் வந்தேன். பின்பு தான் உண்மை உணர்ந்தேன். முதல் நாள் மாலை உன் குழலோசை கேட்டபின் இரவில் உன்னைச் சந்தித்தேன். மனத்தை அடியோடு பறிகொடுத்தேன். இருப்பினும் மனம் ஒப்பவில்லை எனக்கு. மன்னனுக்

கென்று நினைத்து வந்தவளை நான் விரும்புவது தவறு என்று நினைத்தேன். எனக்கு ராணா பிரதாப் விட்டுப் போன மேவாரின் முழு விடுதலை முக்கியம். அதை நினைக்காமல் சலவைக்கல் மஹாலைக் காட்டி அதில் சுகவசதிகளை ஏற்படுத்திக் கொள்ள முயலும் ராணா அமரசிம்மன் புத்தியைப் போருக்குத் திருப்ப உன்னைப் போன்ற வீர வனிதை அவசியம் என்று தந்தை நம்பினார். உன்னை முறைப்படி பெண் கேட்டுப் பார்த்தார். முதலில் நீ வளையல்களை அனுப்பினாயாம். ஆகையால் உன்னைத் தூக்கிவர என்னை தந்தை அனுப்பினார்” என்ற சத்ருஞ்சயன் சிறிது பேச்சை நிறுத்தி, “ஆனால் விதி விளையாடி விட்டது. உன்னைப் போன்ற உறுதியுள்ளவர்களை சுகவாசியான ராணாவுக்கு மணமுடிக்க எனக்கே இஷ்டமில்லை. தவிர உன் அழகு...” என்று வாசகத்தை முடிக்காமல் விட்டான்.

அவள் கண்களை மூடிக்கொண்டாள். சத்ருஞ் சயன் மங்கலான வெளிச்சத்திலும் நிகரற்று விளங்கிய அந்த ராஜபுத்ரியின் முகத்தை மறைத்த முக்காட்டை நீக்கினான். அவளை மெல்லத் திருப்பி தன்மீது சாத்திக்கொண்டான். அப்படியே மல்லாந்தும் படுத்து விட்டான்.

அவள் அவன்மீது கிடந்தாள். அசைவற்ற சிலை போல. அவள் எழிலெல்லாம் அவன்மீது இணைந்தது. எப்படித் திரும்பினாலும், சிறிது புரண்டால்கூட ஏற்படக்கூடிய விளைவை நினைத்து அசையாமலே கிடந்தாள், அந்த வீரன் மீது சந்திரமதி. சத்ருஞ்சயன்

கைகள் எழுந்து மேல்புறமாக அவள் மீது தவழ்ந்தன, துளைத்தன. எழுச்சிகளின் வளைவுகளில் புரண்டன.

உணர்ச்சிகள் அவளையும் உந்தியிருக்க வேண்டும். மெல்ல அவள் அசைய முற்பட்டாள். அசைந்ததால் லாவண்யப் பகுதிகள் அசைந்தன. அவன் தேக ஸ்பரிசத்தால் கெட்டியாகிவிட்ட மொட்டுகளிரண்டு அவன் மார்பில் புதைய முயன்று முடியாமல் தவித்தன. அவள் உடல் சிறிது நெகிழ்ந்து முன்னேறி யதால் அவள் கழுத்து அவன் முகத்தை மறைத்தது. அந்தக் கழுத்தில் புதைந்த முரட்டு இதழ்கள் அதில் தாவித் தாவி இம்சையை விளைவித்தன அவளுக்கு. அந்தச் சமயத்தில் அவளைத் தன்மீதிருந்து பக்க வாட்டில் புரட்டிக் கொண்ட சத்ருஞ்சயன் ஒரு கையைத் தலையில் ஊன்றி ஒருக்களித்து அவள் இதழ் களைத் தனது வலது கை விரல்களினால் தடவினான். கன்னத்தைப் பற்களால் கவ்வினான் கடினமாக. இரண்டு பற்கள் புதைந்த இடம் நன்றாகத் தெரிந்த தால் அந்த வடுக்கள் அவனுக்கு வெறியை அதிகமாக ஊட்டியதால் வேகமாக அவளை அணுக முயன்றான்.

அவள் உணர்ச்சிப் பெருக்கில் முனகினாள். அவன் மேற்கொண்ட செயல்களைத் தடுப்பதுபோல பாசாங்கு செய்தாள். “விளக்கை அணையுங்கள்” என்றாள் மெல்ல.

“சிறையிலிருக்கிறோம்” என்று அவன் மெதுவாகப் பேசினான். அவன் கை மட்டும் பலபடி அலைந்து கொண்டிருந்தது.

“சிறைப்பட்டிருக்கிறோம்” என்று அவள் திருத்தினாள்.

“சிறைப்பட்டிருக்கிறோமா?” என்று அவள் இதழ்களைத் தன் வசப்படுத்த முயன்றாள்.

அவள் இடங்கொடுக்கவில்லை. இதழ்களை வேறு புறமாகத் திருப்பிக் கொண்டாள். “ஆம். பரஸ்பரம் சிறைப்பட்டிருக்கிறோம், இஷ்டத்துடன்” என்றான்.

“இஷ்டமில்லாவிட்டால்?” அவன் அத்தனை உணர்ச்சியிலும் வியப்புடன் கேட்டான்.

“இங்கு இருக்கமாட்டோம்,” என்றாள் அவள். சற்று வளைந்து அவன் உடலுடன் தனது உடலை இணைத்தாள்.

அவனும் அவளை இறுக்கிப் பிடித்தான். “இங்கு இருப்பதும் இருக்காததும் நமது இஷ்டமா?” என்று வினவினான்.

“ஆம்” என்ற சந்திரமதி, “எனக்கு வெட்கமாயிருக்கிறது, விளக்கை அணைத்து விடுங்கள்,” என்றாள்.

“கதவு பூட்டியிருக்கிறது” என்றான் அவன்.

அவள் அவனது கையொன்றை எடுத்துத் தனது இடையில் சேலைக்குள் சொருகி, “எடுத்துக் கொள்ளுங்கள்” என்றாள்.

“அத்தனை காம வேகத்திலும் திடீரென்று ஸ்தம்பித்தன அவன் உணர்ச்சிகள். இடைச் சேலைக்குள்

கையில் அகப்பட்டது வழவழத்த வயிறு அல்ல. நீண்ட மெல்லிய குறுவாளொன்று கையில் தட்டுப்பட்டது. அதை எடுக்க முயன்றான் சத்ருஞ்சயன்.

"அப்படியே இழுக்காதீர்கள். என் வயிற்றைக் கீறிவிடும்," என்றாள்.

"பின் எப்படி எடுப்பது?"

"சீலைப் பிரிவைச் சிறிது பிரியுங்கள். மடிப்பு களுக்குள் வைத்திருக்கிறேன்."

அடுத்து அவன் துரிதமாக சீலையைப் பிரிக்கும் பணியில் இறங்கினான். மெதுவாகச் சீலை மடிப்பு களில் இரண்டை விலக்கிக் கத்தியை லேசாக எடுத் தான். எடுத்ததும் அந்தச் சேலையை மீண்டும் சரிப் படுத்த முயன்றான். "நீங்கள் கத்தியால் பூட்டை உடை யுங்கள். சேலையை நான் சரிப்படுத்திக் கொள்கிறேன்" என்றாள் சந்திரமதி.

அவள் இதழ்களை ஆசையுடன் பருகிய சத்ருஞ் சயன், "சந்திரமதி! அந்தப் பணியும் எனக்கே இருக் கட்டும். நீ பேசாமலிரு" என்று கூறிவிட்டுக் குறு வாளை எடுத்துக் கொண்டு சிறைப் பூட்டை லேசாக மேலே எடுத்து அதன் வாயில் குறுவாளின் நுனியைக் கொடுத்து ஒரு திருகு திருகினான். உள்ளேயிருந்த இரும்பு நறநறவென்று மெல்ல சப்தித்து அடுத்து பூட்டு திறந்தது. மெல்ல கதவைத் திறந்துகொண்டு சிறை வழி யிலிருந்த விளக்கை, திரியை இழுத்து அணைத்தான்.

*எங்கும் மையிருள் சூழ்ந்தது. திரும்பி சிறைக்குள் வந்து, பூட்டை பூட்டியிருப்பதுபோல் மாட்டிய சத்ருஞ் சயன் சந்திரமதியை நாடி வந்தான். அவள் பக்கத்தில் உட்கார்ந்து, "சந்திரமதி! சேலையைக் காட்டு. மடிப்பு களை மறுபடியும் விசிறிபோல் மடிக்கிறேன்" என்று கூறி அவள் இடைச் சேலையை நெகிழ்த்திச் சரி செய்ய முயன்றான். அவள் அவனை அப்படியே அணைத்துக் கொண்டு, "என் ராஜா! உனக்கு இதெல்லாம் ஏற்கனவே பழக்கமா?" என்று அவன் காதில் மிக ரகசியமாகக் கேட்டாள்.*

*"அடி சந்திரமதி! எனக்குப் பழக்கமில்லை. உன்னிடம்தான் கற்றுக் கொள்ள வேண்டும்" என்று அவள் காதில் அவனும் ஓதினான். சேலையைச் சரி செய்ய முயன்று முடியாமல் திண்டாடினான்.*

*சந்திரமதி அவன் கையைப் பிடித்து, "அப்படி அல்ல. இப்படி முடியுங்கள்" என்றாள். அவன் தொடர்ந்து திண்டாடினான்.*

*"ஐயையோ! மடிக்கவில்லை நீங்கள்..." என்று மிரட்டிய அவள், "நேரமாகிறது" என்றாள்.*

*"எதற்கு?" அவன் மெதுவாகக் கேட்டான், அவள் சொன்னதைத் தவறாகப் புரிந்துகொண்டு.*

*அவன் இச்சையைப் புரிந்து கொண்ட அவள் மனோகரமாக மிக மெதுவாக நகைத்தாள். "தந்தை வருவதற்கு" என்று நகைப்பின் ஊடே கூறினாள்.*

அதிர்ச்சி அவன் உணர்ச்சிகளை அறுத்தெறிந்தது. “எதற்கு உன் தந்தை வருகிறார்?” என்று வினவினான் சத்ருஞ்சயன்.

“மூன்றாவது ஜாம ஆரம்பத்தில் தெரியும்.” என்றாள் அவள்.

“அதுவரை...?” என்று அவன் கேட்டான்.

“நான்!”

“உம்?”

“உங்கள் அடிமை” என்று அவள் அவன்மீது சாய்ந்தாள். சாய்ந்த அந்தத் தாமரையை அவன் தனது கைகளில் ஏந்தினான், இழுத்தான், இறுக்கினான்.

# 11
# விடுதலை

காலகதி ஒரு மாதிரியாக, ஒரே விதமாக, ஒரே அளவுடன் ஓடிக் கொண்டிருந்தாலும், நேரத்தின் அனுபவம் மட்டும் மனிதனுடைய சிந்தனையைப் பொறுத்ததாகவே அமைகிறது.

ஒரு மனிதரிடம் நாம் இரண்டு நாழிகைகள் பேசிக் கொண்டிருக்கிறோம். அவர் எழுந்து போகும் போது ஏதோ அரை விநாடிதான் பேசிக் கொண்டிருந்ததாக நினைக்கிறோம். இன்னொருவர் வந்து அரை நிமிஷம் பேசுகிறார். பத்து நாழிகை பேசிவிட்ட அலுப்பு நமக்கு வருகிறது. உரையாடலின் சுவாரஸ்யம், பேசும் மனிதரை நமக்கு எத்தனை தூரம் பிடிக்கிறது என்ற உணர்ச்சி இவற்றைப் பொறுத்து நேரம் அதிகமாகி விட்டதா குறைந்ததா வென்பதை நாம் நிர்ணயிக்கிறோம்.

சாதாரண உரையாடலுக்கே இந்த நியதி என்றால் காதல் அனுபவத்துக்கு நேர நிர்ணயம் ஏது? எத்தனை நேரமும் குறைந்த நேரமாகத் தானே தெரியும்! நேரம்

அனாவசியமாக ஓடிவிட்ட எண்ணந்தானே மனத்தில் நிலைக்கும். அப்படித் தானிருந்தது சந்திரமதிக்கும் சத்ருஞ்சயனுக்கும் அந்த இரவில், சிறைச்சாலை மணி மூன்றாவது ஜாமத்தை வலியுறுத்தியபோது.

கணீர் கணீரென மும்முறை மணி ஒலித்ததும் சத்ருஞ்சயனை விட்டு விலகினாள் சந்திரமதி வேக மாக. "தந்தை வரும் நேரமாகி விட்டது" என்றும் வலி யுறுத்தினாள்.

சத்ருஞ்சயன் அடுத்த நிகழ்ச்சிக்குத் தயாராகிக் குறுவாளைக் கையில் ஏந்தி உடையையும் சீர்படுத்திக் கொண்டு எழுந்து நின்று தனது அறைக்கு வெளியே எட்டிப் பார்த்தான். எங்கும் காரிருள் கவிழ்ந்து நின்றது. இரண்டே இரண்டு சிறைச் சாலைக் காவலர் உலவும் பாதரட்சை ஒலி மட்டும் 'சர் சர்' என்று ஒரே சீராகக் கேட்டது. அதைப் பார்த்துத் திரும்பிய சத்ருஞ்சயன், "சந்திரமதி! காவலர் இருவர் தானிருக் கிறார்கள்" என்று சொன்னான்.

"இந்தச் சிறைச்சாலையில் என்றுமே காவல் அதிகம் கிடையாது?" என்றாள் சந்திரமதி.

"ஏன்? யாரும் தப்ப மாட்டார்களென்ற நினைப் பா?" என்று கேட்டான் சத்ருஞ்சயன்.

"தப்பியும் பயனில்லை என்ற நினைப்பு. ஒவ் வொரு கோட்டை வாசலும் பலமாகக் காக்கப்பட் டிருக்கிறது. இந்தச் சிறையிலிருந்து தப்பினாலும் கோட்டையிலிருந்து தப்ப முடியாது" என்றாள் சந்திரமதி.

அடுத்து ஏதோ பதில் சொல்ல முற்பட்ட சத்ருஞ் சயன் சட்டென்று பேச்சை நிறுத்திக் கொண்டான். சிறையின் முகப்பு வாசலில் திடீரென ஏதோ நிழல்கள் தெரிந்தன. அடுத்த சில வினாடிகளில் இரு காவலர் களின் பாதரட்சை ஒலி நின்றது. தட் என்று யாரோ விழுந்த சத்தம் மட்டும் கேட்டது. பிறகு அரவம் எதுவும் இல்லை. சிறிதும் சத்தம் செய்யாமல் சில உருவங்கள் சிறைச்சாலைக்குள் புகுந்துவிட்டன. சத்ருஞ்சயன் இருக்கும் அறைக்கு வந்ததும் காலடிகள் நின்று விட்டன. "சத்ருஞ்சயா! எங்கிருக்கிறாய்?" என்று ஒலித்தது மெதுவாக மல்லிநாதர் குரல்.

"இதோ இருக்கிறேன்" என்று கூறிக்கொண்டு கதவைத் திறந்து வெளியே வந்தான்.

"இதோ உன் வாள், பிடி" என்று கூறிய மல்லி நாதர் அவன் கையில் அவன் வாளைத் திணித்தார். "சந்திரமதியிடம் இந்த வாளைக் கொடு" என்று இன் னொரு வாளையும் அவனிடம் கொடுத்த மல்லிநாதர், "மகளே!" என்று அழைத்தார்.

சந்திரமதி அவருக்கு அருகில் வந்தாள். அவள் தலையைக் கோதி முதுகையும் வருடிக் கொடுத்த மல்லிநாதர், "சந்திரமதி! உன்னை வளர்த்த பயனை அடைந்து விட்டேன். உன்னை ஒப்படைக்க வேண்டி யவனிடம் ஒப்படைத்துவிட்டேன். இந்தச் சிறைக்கு வெளியே இரண்டு புரவிகள் இருக்கின்றன. வேகத்தில் நிகரற்றவை. நீங்களிருவரும் அவற்றில் ஏறிச் செல்லுங் கள். முதலில் அவசரத்தைக் காட்ட வேண்டாம். மெதுவாகச் செல்லுங்கள். இப்பொழுது கோட்டை

வாசலில் காவல் மாறும். புதுக் காவலர் என்னிடம் வித்தை பயின்றவர்கள். நீங்கள் கேட்காமலே உங் களுக்கு வாசல் திறக்கப்படும். வெளியே சென்றதும் தாமதிக்காதீர்கள். புரவிகள் வாயு வேகத்தில் பறக் கட்டும். உங்களை யாராவது தொடர்ந்தால் மறித் தால் வாளிருக்கிறது உங்களைக் காத்துக் கொள்ள" என்றார் மல்லிநாதர்.

"நீங்கள் ?" என்று கவலையுடன் கேட்டாள் சந்திரமதி.

"இனி நீ கவலைப்பட வேண்டியது உன் கண வனைப் பற்றி. சதா பிறந்தகத்தை நினைப்பது இந்து தர்மத்துக்குச் சரியாகாது, உங்களை நான் இரண்டு தினங்களில் சந்திப்பேன். இல்லையேல் இந்தக் கோட்டை என் வசமான செய்தி உங்களுக்கு வரும்" என்ற மல்லிநாதர், "உம் வாருங்கள் என்னைத் தொடர்ந்து" என்று சொல்லி முன்னே நடந்தார். அவருடன் வந்த மூன்று சீடர்களும் அவருக்கு முன்னே நடந்தார்கள். சிறைச் சாலை முகப்புத் தாழ் வரையில் இரு காவலர் விழுந்து கிடந்தனர். முஸபர் வாயில் துணியைக் கௌவி உடலுக்குக் குறுக்கே பிணிக்கப்பட்ட கயிறுகளுடன் காட்சியளித்தார். இவற்றையெல்லாம் சத்ருஞ்சயன் கவனித்தாலும் மல்லிநாதர் எதையும் கவனிக்காமல் சிறைச்சாலைக்கு வெளியே நடந்தார்.

சிறைச்சாலைக்கு வெளியே இரு அழகிய புரவிகள் நிற்பதைக் கண்ட சத்ருஞ்சயன் அவற்றிலொன்றைத்

தடவினான். பிறகு கடிவாளத்தை அவிழ்த்து ஏறச் சித்தமானான். இன்னொரு புரவியில் சந்திரமதி ஏறி தன் உறையிலிருந்த வாளை ஒரு முறை தட்டிப் பார்த்துக் கொண்டாள். மல்லிநாதரும் அவர் சீடர்களும் அடுத்து அங்கு நிற்கவில்லை. பக்கத்து சந்துகளில் மறைந்து விட்டார்கள்.

சத்ருஞ்சயன் தனது புரவியை நிதானமாக நடத்தினான். சந்திரமதியை முக்காட்டால் முகத்தை நன்றாக மறைக்கும்படி கூறி அவளைப் பின்னால் தன் புரவியுடன் நெருங்கி வரும்படி கூறினான். “என்னை யாராவது தடுத்தால் உடனடியாக உனது புரவியைத் துரத்திக் கோட்டைக்கு வெளியே விரைந்துவிடு” என்றும் தெரிவித்தான்.

“நீங்கள் ?” என்று வினவினாள் சந்திரமதி.

“எதிர்ப்பவரை வெட்டிவிட்டு வருவேன் மல்லிநாதர் மகளே! இந்த வாள் என்னிடம் வந்த பிறகு என்னை யாரும் ஜெயிக்க முடியாது” என்று பேசிய சத்ருஞ்சயன் புரவியை மெதுவாக நடக்கவிட்டான்.

கோட்டை வாயிலுக்கு வந்ததும் மல்லிநாதர் சொன்னபடிதான் சகலமும் இருந்தது. வாசலில் காவல் மாறிக் கொண்டிருந்தது. ஆனால் அடைக்கப்பட்ட கதவு மட்டும் திறக்கவில்லை. இருப்பினும் பழைய காவலர் சென்று புதுக் காவலர் வந்ததும் கதவு திறக்கப்பட்டது. அதை அடைந்து சந்திரமதி வெளியே சென்றதும் கதவு மெதுவாக மூடத் தொடங்கியது.

அந்தச் சமயத்தில் துவங்கினான் சத்ருஞ்சயன் தனது நடவடிக்கையை. கதவை மூட முற்பட்ட ஒருவன் கையில் குறுவாளெறிந்து அந்தக் கையை பயனற்ற தாகச் செய்தான். அடுத்து வாளை உருவிக் கொண்டு வாயிலை நோக்கிப் புரவியைப் பாய விட்டான். இடையே வந்த இருவரை அவனது வாள் தடுத்தது. வெகு வேகத்தில் பக்கங்களில் வந்தவரைக் காயப் படுத்தி வீழ்த்திவிட்டு வெளியே புரவியைப் பறக்க விட்டான்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு கோட்டை முரசு பலமாக ஒலித்தது. மல்லிநாதர் பத்து வீரர்களுடன் புரவியில் வந்து, "என்ன இங்கே?" என்று வியப்புடன் விசாரித்தார்.

"யாரோ இருவர் தப்பி ஓடுகிறார்கள்" என்றான் ஒரு காவலன்.

அவன், தனது மாணவனில்லை என்பதை உணர்ந்து கொண்ட மல்லிநாதர் மீண்டும் கேட்டார், "யார் அது?" என்று.

"தெரியவில்லை" என்றான் காவலன்.

"அப்படியானால் அவர்களை ஏன் துரத்த வில்லை?" என்று கேட்ட மல்லிநாதர், "மாணவர்களே! வாருங்கள். அநேகமாக ஓடியவர்கள் அடிக்கடி வரும் ராணாவின் ஒற்றர்களாகத்தான் இருப்பார்கள்" என்று கூறி தமது புரவியைக் கோட்டைக்கு வெளியே பறக்கவிட்டார்.

முன்னே சத்ருஞ்சயன் புரவியும் சந்திரமதியின் புரவியும் கண்ணுக்குத் தெரியாததால் திரும்ப முயன் றார் மல்லிநாதர். பிறகு எதையோ நினைத்துக் கொண்டு தனது மகளும் மருமகனும் சென்ற திசைக்கு நேர் எதிர்த் திசையில் தமது புரவியைச் செலுத்தினார். மாணவர்களும் அவர் புரவியைத் தொடர்ந்தனர். அவர்கள் ஓடுவதைக் கண்ட கோட்டைக் காவலர் அந்தக் கூட்டத்தைப் பின் தொடர்ந்தார்கள்.

சத்ருஞ்சயனும் சந்திரமதியும் சிறிது தூரம் புரவி களைத் துரத்திப் பிறகு இனி அவசரமில்லை என்ற நினைப்பில் புரவிகளைச் சிறிது நிறுத்தினார்கள். அவர்கள் நின்ற இடத்திலிருந்து சிறிது தூரத்தில் ஜஸ்வந்த் நின்றிருந்தான், இரு காவலருடன். “சத் ருஞ்சயா! இதை நான் எதிர்பார்த்தேன்” என்று கூறிக் கொண்டு, வாளை உருவிக்கொண்டு தனது வீரர் இருவருடன் சந்திரமதியையும் சத்ருஞ்சயனையும் நெருங்கினான்.

ஜஸ்வந்தின் தலையில் அப்பொழுதும் கட்டு இருந்ததால் சத்ருஞ்சயன் புரவியிலிருந்து அசைய வில்லை. “ஜஸ்வந்த்! நான் உன்னுடன் போராட முடியாது. நீ காயப்படடிருககிறாய்” என்றான்.

“என் வாளுக்குக் காயமில்லை” என்று சொல்லிக் கொண்டே ஜஸ்வந்த் சத்ருஸ்சயனை நெருங்கினான்.

அவன் தன்னை அணுகுமட்டும் காத்திருந்த சத்ருஞ்சயன் எதிரி வாள் தன்மீது பாய மேலே எழுந்த தும் தனது வாளைத் திடீரென உருவி எதிரி வாளைத்

தடுத்தான். ஒருமுறை அதைச் சுழற்ற அது ஜஸ்வந்தின் கையிலிருந்து பறந்தது.

இப்படி இந்த இருவரும் பொருது கொண்டிருந்த போது சந்திரமதியை அணுகிய இருவரும் திடீரென அலறினார்கள். அவர்கள் கைகள் செயலற்றுத் தொங் கிக் கொண்டிருந்தன. "அவர்களைக் கொல்லாதே சந்திரமதி" என்று கூவிக் கொண்டு அவள் புரவியின் வயிற்றில் உதைத்து அவள் புரவியைப் பறக்க விட் டான் சத்ருஞ்சயன். அவளை அசுர வேகத்தில் அவனும் பின் தொடர்ந்தான்.

மறுநாள் காலை உதயபூரை அடைந்து குடிசையில் உட்கார்ந்திருந்த தனது தந்தையின் கால்களில் சந்திர மதியுடன் வணங்கினான் சத்ருஞ்சயன்.

"இவள் யார்?" என்று கேட்டார் சலூம்ப்ரா.

"மல்லிநாதர் மகள்" என்றான் மகன்.

"மல்லிநாதர் மகளா?"

"ஆம். இவளை எனக்கு மணம் முடிப்பதாக நீங்களும் அவரும் சபதம் செய்து கொண்டீர்களாம்" என்று கதையைத் துவங்கினான் சத்ருஞ்சயன்.

சலூம்ப்ரா சிந்தித்தார். "ஆம். அப்படி ஒரு சபதம் செய்தோம். இப்பொழுது நினைவுக்கு வருகிறது" என்றார்.

"அதை உங்கள் நண்பர் நிறைவேற்றிவிட்டார்."

"எதை?"

"சபதத்தை"

"எப்படி ?"

"அவர் மகளை எனக்கு மணம் முடித்துக் கொடுத்து விட்டார். இவள்தான் உங்கள் மருமகள்" என்ற சத்ருஞ்சயனைச் சீற்றத்துடன் பார்த்தார் பெரிய சலூம்ப்ரா. "நான் உன்னை அனுப்பிய பணி என்ன வாயிற்று ?" என்று கேட்டார்.

"முடித்துவிட்டேன்" என்றான் சத்ருஞ்சயன்.

"சந்திரமதியைக் கண்டு பிடித்தாயா ?"

"கண்டு பிடித்து விட்டேன்"

இதனால் உற்சாகப்பட்ட பெரிய சலூம்ப்ரா, "எங்கே சந்திரமதி?" என்று கேட்டார்.

"இதோ" என்று தன் மனைவியைக் காட்டினான் சத்ருஞ்சயன்.

"இவளை ராணாவுக்கு மணமுடிக்க உன்னை அனுப்பினேன். நீயே மணமுடித்துக் கொண்டாயா ?" என்று சீறினார் தந்தை.

சத்ருஞ்சயன் தர்ம சங்கடத்துடன் அசைந்தான். அந்தச் சமயத்தில் உள்ளே நுழைந்த மல்லிநாதர், "சந்தா ! உன் மகனுக்கு என்று முடிவு கட்டிய நீ அவளை ராணாவுக்குக் கொடுக்க முற்பட்டது என்ன நியாயம் ?" என்று வினவினார்.

குடிசையிலிருந்து மூவரையும் திரும்பிப் பார்த்த சலூம்ப்ரா வேகமாகக் குடிசையிலிருந்து வெளியேறி

னார். நேராகத் தமது புரவிமீது ஏறி அமர்மஹாலுக்கு விரைந்தார். அங்கு மஹாலுக்குள் நுழைந்ததும் மன்னனை நோக்கினார் மிகுந்த சினத்துடன்.

அமரசிம்மன் அப்பொழுது தனது சேனாதிபதிகள் புடை சூழ சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தான். அவனுக்குப் பின்னால் அந்தப் பெரிய பிரிட்டிஷ் கண்ணாடி காட்சியளித்தது. அதில் ராணாவின் தலைப்பாகையின் பின்பகுதி மிக அழகாகத் தெரிந்தது. அந்த மஹாலின் நடுவே நின்ற சலூம்பரா வம்சத் தலைவர் தமது மகன் மீதிருந்த சீற்றத்தை மன்னன் மீது திருப்பி, "ராணா! என்று கூவினார்.

ராணா மெதுவாக சலூம்ப்ராவை நோக்கித் திரும்பினார். "என்ன சேனாதிபதி?" என்று வினவினார்.

"இந்தக் கண்ணாடி எதற்கு?" என்று கேட்டார் பெரிய சலூம்ப்ரா.

"தர்பாருக்கு அழகு செய்ய" என்றான் அமர சிம்மன்.

அவ்வளவுதான், சலூம்ப்ராவின் சினம் உச்ச நிலையை எட்டியது. சபையிலிருந்த படைத் தலைவர்கள் மீது ஒரு முறை தமது பெரிய விழிகளைச் சுற்ற விட்டார். மஹாலின் அற்புத சித்திர வேலைப்பாடுகளையும் வெறுப்புடன் பார்த்தார். "இந்தச் சுகத்துக்கும் படாடோபத்துக்குமா ராணா பிரதாப் ஆயுள் முழுவதும் போரிட்டு மடிந்தார்? ராணா தூங்குவதற்கு ஓர் அரண்மனை! அதில் ஓர் அழகு தர்பார்! சூழ்ந்து

உட்கார்ந்திருக்க உங்களைப் போல் பொம்மைகள்!" என்று கூவி, தரையில் விரிக்கப்பட்டிருந்த பெரிய விரிப்பு பறக்காதிருப்பதற்காக வைத்திருந்த ஒரு பெரிய கல்லை எடுத்து ராணாவுக்குப் பின்னாலிருந்த கண்ணாடிமீது வேகமாக வீசினார்.

அனைவரும் அச்சத்தின் வசப்பட்டனர். கண்ணாடி பெருத்த சத்தத்துடன் விரிந்தது பல இடங்களில். அதில் ராணா பலவிதமாகத் தெரிந்தார். அடுத்து சலூம்ப்ரா விரைந்து, சிம்மாசனத்திலிருந்து ராணாவைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு, "வாருங்கள் படைத் தலைவர்களே! பிரதாப சிம்மன் மகனை அவமானத்திலிருந்து காப்பாற்றுவோம். பிரதாப சிம்மனுக்கு அவர் மரணத்தின்போது அளித்த பிராமாணத்தைக் காப்போம்" என்று இரைந்து பித்துப் பிடித்தவர் போல் கூவிக்கொண்டு ராணாவை வெளியே இழுத்துச் சென்று புரவிமீது ஏற்றினார். சலூம்ப்ராவின் வீரக் கூச்சல் மற்ற படைத் தலைவர்களையும் ஊக்கவே "ஜேய் ராணா பிரதாப்" என்று கூவிக் கொண்டு தொடர்ந்தனர் சலூம்ப்ராவை. அடுத்து மன்னன் புரவியும் மற்றவர் புரவிகளும் வீர கோஷங்களுடன் விரைந்தன. மீண்டும் மேவாரின் சுதந்திரப் போர் துவங்கியது.

சலூம்ப்ரா சென்றதும் புதுத்தம்பதிகளை தனிமையில் விட்டு நண்பனைப் பின்பற்றிச் சென்ற மல்லி நாதரும் போர்க்கூட்டத்துடன் போய்விட்டபடியால் திரும்பவில்லை. குடிசையில் தனித்திருந்த சந்திரமதி "நாம் இனி என்ன செய்வது?" என்று கேட்டாள்.

"நீதான் சொல்லவேண்டும்" என்றான் சத்ருஞ்சயன்.

"சொல்ல என்ன இருக்கிறது?" என்றாள் சந்திர மதி.

"ஆம் ஆம். ஏதுமில்லை" என்று சத்ருஞ்சயன் அவளை அணுகினான். "இந்தத் தரையில்தான் ராணா பிரதாப் படுத்திருந்தார்" என்றும் சொன்னான்.

"இதைவிடச் சிறந்த இடம் ஏது?" என்ற சந்திர மதியின் முகம் அந்திவானத்தைப் போல் சிவந்தது.



**பின் குறிப்பு :**

சலூம்ப்ரா கண்ணாடியைக் கல்லெறிந்து உடைத்ததும் சரித்திரம். மன்னனை அரியணையிலிருந்து இறக்கி இழுத்துச் சென்றதும் சரித்திரம். பிறகு நடந்த இரண்டு பெரிய போர்களில் மேவார் தலையெடுத்ததும் சரித்திரம். ஒண்டாலா மேவார் வசமானதும் சரித்திரம். நமது பாரத நாட்டு வீர சரித்திரத்தில் இது ஒரு சிறந்த ஏடு. நமது இளைஞர்களும் பெரிய வீரர்களாக வேண்டும் என்ற கனவுடன் இந்தச் சிறு நாவல் எழுதப்பட்டுள்ளது.

— **சாண்டில்யன்**